# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை




சிலம்பு-௪௯] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௬, மார்கழி (Jan. '75) [பரல்-௬

# ‘செந்தமிழ்ச் செல்வி’

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்

௧. டாக்டர் ந. சஞ்சீவி, எம். ஏ., பி.எச்டி.
தமிழ்த்துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்

௨. ‘சித்தாந்த கலாநிதி’, உரைவேந்தர்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், மதுரை

௩. திரு. கொண்டல், சு. மகாதேவன் அவர்கள், எம். ஏ., பி. எஸ்ஸி
இயக்குநர், தமிழகவரசு தமிழ் வளர்ச்சித்துறை.

௪. செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப். லிப்
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.

௫. செந்தமிழ்க் கலைமணி, வித்துவான்,
பண்டித, கா. பொ. இரத்தினம் அவர்கள்,
பி.ஏ. (ஆனர்சு), (லண்டன்) எம்.ஏ., பி.ஓ.எல். (சென்னை)
கொழும்பு.

௬. புலவர் இரா. இளங்குமரன்,
திருநகர், மதுரை-6.

௭. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை.

---

# தமிழ் இசைச் சங்கம், சென்னை

## சர். ஆர். கே. சண்முகஞ் செட்டியார் திருவுருவச்சிலை திறப்பு

20—12—1974



திறப்பாளர் : திரு. தி. மு. நாராயணசாமி பிள்ளையவர்கள்

வரவேற்புரை : செட்டி நாட்டரசர்
டாக்டர் சர். முத்தையா செட்டியார் அவர்கள்

## தமிழ் இசை முப்பத்திரண்டாம் விழா

21—12—1974



தொடக்கவுரை : உயர்நீதிமன்ற நடுவர்
மாண்புமிகு எம். எம். இஸ்மாயில் அவர்கள்

## தமிழ் இசைச் சங்கம் பண்ஆராய்ச்சியின் வெள்ளி விழா
22—12—1974



தொடக்கவுரை: உயர்நீதிமன்ற நடுவர் எஸ். மகராசன் அவர்கள்
விழாத்தலைவர்: இசைப் பேரறிஞர் திருவீழிமிழலை
எஸ். சுப்பிரமணிய பிள்ளையவர்கள்

## திருநெல்வேலி, குமரகுருபரர் குழந்தைப் பள்ளி
7-ஆவது ஆண்டு விழா



தலைவர்: சார்பு துணைநடுவர் தே. பா. சு. பழனிசாமி அவர்கள்
வரவேற்பு: கழக ஆட்சியாளர் வ. சுப்பையா

செந்தமிழ்ச் செல்வி
திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ00டு, மார்கழி | பரல் |
|---|---|---|
| ச௬ | சனவரி 1975 | ரு |

# மொழிப் பேரறிஞர் பாவாணரும் தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியும்

தணிகைமணி டாக்டர் வ. சு. செங்கல்வராயபிள்ளை அவர்கள் எம். ஏ., பன்னிரு திருமுறைகட்கும் ஒளிநெறியும் ஒளிநெறிக் கட்டுரையும் எழுத வேண்டுமென்று திட்டமிட்டு 1938இல் ஆவணப் பதிவுத் துறையினின்றும் ஓய்வு பெற்றதும் அவற்றை எழுதத் தொடங்கினர்கள். பன்னிரு திருமுறைகளில் முதல் ஒன்பது திருமுறைகட்கும் ஒளிநெறி நூல்களும் ஒளிநெறிக் கட்டுரை நூல்களும் எழுதி முடித்து 1971இல் தமது 89ஆம் அகவையில் இறையடி சேர்ந்தார்கள். அவர்களது செயற்கரிய பணியினைப் பாராட்டி மாண்புமிகு கல்வி அமைச்சர் டாக்டர் நாவலர் நெடுஞ்செழியனவர்கள் பரிந்துரைத்ததன் பேரில் மதுரைப் பல்கலைக் கழகம் 1-9-1969இல் (டி. லிட்.) டாக்டர் பட்டம் வழங்கியது.

ஒளிநெறி, ஒளிநெறிக் கட்டுரை எழுதுவதற்குத் தமிழ் இலக்கண இலக்கியங்களில் நிரம்பிய புலமையும் எல்லையில் பொறுமையும் வேண்டும். அவற்றை வீட்டிலிருந்தபடியே நூல்களின் துணைகொண்டு எழுதி முடிக்கலாம். ஆனல் மொழிப் பேரறிஞர் தேவநேயப் பாவாணர் அவர்கள் எழுத விரும்பிய வேர்ச்சொல் அகரமுதலி வீட்டிலிருந்தபடியே எழுதக்கூடிய வேலையன்று. அதனை எழுதி முடிப்பதற்கும் இலக்கண இலக்கியப் புலமையும் எல்லையில் பொறுமையும் வேண்டும். அவ்விரண்டினாலும் வேர்ச்சொல் அகரமுதலியைத்

தொகுத்தெழுத முடியாது. பிறமொழிகளிலும் பயிற்சி பெறுதல் வேண்டும். வேர்ச்சொற் கட்டுரைகளை ஒருவாறு வீட்டிலிருந்த படியே தமிழ் தமிழ் அகரமுதலிகள், இலக்கண இலக்கியங்கள் புலமை கொண்டு எழுதலாம். அவ்வாறு செந்தமிழ்ச் செல்விக்கு வேர்ச்சொற் கட்டுரைகளை எழுதி வருகின்றார்கள். அவற்றிற் சில கட்டுரைகளைத் தொகுத்து 'வேர்ச்சொற் கட்டுரைகள் முதற் புத்தகம்' என்று கழகம் 1973 மார்ச்சுத் திங்களில் வெளியிட்டுள்ளது. ஆனால் வேர்ச்சொல் அகர முதலி என்பது அம்முறையில் வீட்டிலிருந்தபடியே தன்னந் தனியே செய்து முடிக்கக்கூடிய பணியன்று. அவர்களாகவே இதுவரை எழுதி வைத்திருப்பதை அச்சிடுவதாயின் அது நிறைவுடையதாகாது.

3,000 ஆண்டுகட்கு முன் தோன்றிய 'தொல்காப்பியம்' என்னும் பழந்தமிழ் இலக்கணம் மட்டுமே நமக்குக் கிடைக்கப் பெற்றுள்ளது. இலக்கியத்திற்குப் பின்னரே இலக்கணம் தோன்றும் ஆதலால் கடல் பரப்புப் போன்ற பலவகை இலக்கியங்களும் கலைநூல்களும் அழிந்தொழிந்து போயின. அப்படி இலக்கியங்கள் இருந்திருக்காவிடில் தொல்காப்பியம் போன்ற திருந்திய செவ்விய இலக்கண நூல் வெளிவந்திருக்க முடியாது. நமக்கு இப்போது கிடைக்கப்பெறும் பழைய இலக்கியங்கள் எல்லாம் தொகைநூல்களாகவே இருக்கின்றன. 'கலை மலிந்த தமிழ்' என்று புலவர்கள் போற்றுவதால் எத்தனையோ கலை நூல்கள் அழிந்தொழிந்து போயின.

நம் பழந்தமிழ்ச் சொற்கள் உலகிலே தோன்றிய பிற மொழிகளிற் திரிபுற்று வழங்கப் பெறுகின்றன. அண்மைக் காலத்தில் தோன்றிய மலையாள மொழியில் ஒரு பொருள் பல சொற்களிற் சில அப்படியே வழங்கப் பெறுகின்றன. 1799இல் பெப்ரீசியசு (Fabricius) இயற்றிய தமிழ் ஆங்கிலம் அகரமுதலி (The Malabar English Dictionary)யில் 'The Malabar Language that is known as the Tamilian Language' என்று குறிக்கப் பெற்றுள்ளது.

மற்றத் திராவிட மொழிகளாகிய தெலுங்கும் கன்னடமும் துளுவும் சில நூற்றாண்டுகட்குமுன் பிரிந்து சென்றபின் அவற்றோடு வடமொழி கலந்து பெரிதும் வேறுபட்டுக் காணப் பெறுகின்றன. எனினும் அவர்கட்கு 1500 ஆண்டுகட்கு முற்பட்ட மூல இலக்கியங்கள் கிடைக்கப்பெறா. தமிழ் இலக்கியங்களே அம் மொழிகட்கும் மூல இலக்கியங்களாகும். தமிழர் பழக்க வழக்கங்களிற் சிலவும் பண்பு நலங்களிற் சிலவும் அம் மொழிகள் பேசும் மக்களிடம் இன்றுங் காணலாம்.

இஃதேயன்றி உலக மொழிகளிலும் தமிழ் வேர்கள் இருப்பதை மொழிநூல் வல்லார் கூறுகின்றனர். தவத்திரு விபுலானந்த அடிகள் சில ஆண்டுகட்குமுன் பவழக்காரத் தெரு ஏ. ஆர். சி. உயர்நிலைப் பள்ளியில் பேசும்போது மத்தியத் தரைக்கடலோரமுள்ள ஊர்களிற் பேசப்படும் மொழிகளிற் பல தமிழ்ச் சொற்கள் திரிபுற்று வழங்கப் பெறுவதை விளக்கிப் பேசினார்கள்.

புதையுண்ட மொகஞ்சதரோ, ஆரப்பா ஆகிய நகரங்களில் காணப்படும் சொற்கள் தமிழ் என்றே மொழிவல்லுநர் ஆய்ந்து கூறுகின்றனர்.

மேலும் நம் தமிழ் அகரமுதலி நூல்களிலும் நிகண்டு களிலும் காணப்பெறாத பல சொற்கள் மீனவர்கள், கை வினைஞர்கள், மலைவாழ்மக்கள் முதலியோரிடம் வழக்கில் இருந்து வருகின்றன.

அவற்றையெல்லாம் தொகுப்பதற்குத் திரு பாவாணர் அவர்கட்குத் திராவிட மொழிகளில் பயிற்சி பெற்ற அறிஞர் ஒருவர் அல்லது இருவர், தமிழ் இலக்கியங்களில் பயிற்சி பெற்ற ஒருவர் அல்லது இருவர் கட்டாயமாகத் துணைவர்களாக அமர்த்தப் பெறுதல் வேண்டும்.

இந்த முறையில் சொற்களைப் பல இடங்கட்குச் சென்று தொகுப்பதற்கு இயங்கி (மோட்டார்) ஒன்று கட்டாயமாக வேண்டும். ஆங்கிலம், பிரெஞ்சு முதலிய மொழிகளில் வெளி யிடப் பெற்றிருக்கும் வேர்ச்சொல் விளக்க அகரமுதலி நூல் களும் கலைக் களஞ்சியங்களும் இருத்தல் வேண்டும். இத்தகைய முறையில் வேர்ச்சொல் அகரமுதலி தொகுப்பதற்கு ஏற்றவகையில் ஏற்றதோர் அலுவலகம் வேண்டப்பெறும்.

வேர்ச்சொல் அகரமுதலிக்கெனத் தனித்துறை ஏற்படுத்தித் தமிழக அரசு மொழிப் பேரறிஞர் தேவநேயப் பாவாணர் அவர்களை 8-5-1974இல் இயக்குநராக அமர்த்தியது. ஆனால் இன்றுகாறும் அவர்கட்குப் போதுமான இடவசதியுள்ள அலு வலகம் கொடுக்கப் பெறவில்லை. மேலும் அவர்கள் விரும்பியபடி திராவிட மொழிகளில் பயிற்சியுள்ள சேலம் கல்லூரிப்பேராசிரியர் மதிவாணன் அவர்களும், திருநகர் முக்குலத்தோர் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் புலவர் இளங்குமரன் அவர்களும் அமர்த்தப்பெறவில்லை.

கருணாநிதி நகரில் குடிக்கூலிக்கமர்த்தப்பெற்ற ஒருவீட்டில் தங்கிக் காட்டுப்பாடியிலிருந்தது போலிருந்து அகரமுதலியை

எழுதி வருகின்றார்கள். அதனை அப்படியே அச்சிடுவதனால் யாதொரு பயனுமில்லை.

முதற்கண் திரு பாவாணர் அலுவலகத்துக்குத் தமிழகவரசு பாடநூல் நிறுவனத்தில் 12' × 6' அடி அளவில் ஓர் அறை கொடுக்கப்பெற்றது. அங்கே மேசை நாற்காலி போட்டு ஒருவர் மட்டுமே இருந்து வேலை செய்ய முடியும். மேலும் அவர்கள் அலுவலகம் கன்னிமாரா போன்ற நூல்நிலையத்தை ஒட்டி இருப்பதே நல்லது.

அதைக் கருதி 16-5-1974இல் யானும் திரு. பாவாணர் அவர்களும் தமிழ் வளர்ச்சி மன்றச் செயலர் திரு. செல்லப்பன் அவர்களும் கன்னிமாரா நூலகஞ் சென்று பொதுநூலகர் திரு. வே. தில்லைநாயகம் அவர்களைக் கண்டு புதிய நூலகக் கட்டடத்தில் ஒரு பகுதியினைக் குறிப்பிட்டுக் கேட்டோம். அவர்கள் இருந்தபடியே வரவேற்று இங்கே இடம் கிடையாது என்றனர். பின்னர் என்னிடம் 'உங்கள் மறைமலையடிகள் நூல்நிலையத்திலே இடங் கொடுக்கலாமே'என்றனர். அடுத்து இங்கே வருவதாயின் கையிலே கொண்டுவரும் பொருள்களை வாயிலிலே ஒப்படைப்பதற்குரியவரிடம் ஒப்படைத்து வருதல் வேண்டுமென்றனர்.

பேரறிஞர் பாவாணர் அவர்கள் தமிழக அரசினரால் எதன் பொருட்டு இயக்குநராக அமர்த்தப் பெற்றிருக்கின்றனர் என்பதும், அப்பணி எத்தகைய ஒப்பில் பணி என்பதும், மறைமலையடிகள் நூல்நிலையத்தின் அமைப்பு எத்தகையது என்பதும் அறியாமல் கூறினார்களா என்பது பற்றி இதனைப் படிப்பவர்கள் அறிந்து கொள்ளட்டும் என விட்டுவிடுகின்றேன்.

அலுவலகத்துக்கென ரூ. 2,000/-க்குக் கொடுக்கப்பெற்ற கட்டளையின்படி நூல்கள் யாவும் கழகத்திலே தொகுத்து வைக்கப் பெற்றிருக்கின்றன. அலுவலகத்துக்கு வேண்டப் பெறும் தட்டுமுட்டுப் பொருள்கள் (Furniture) எல்லாம் குறளகத்திலே வந்திருக்கின்றன என்று அறிகின்றேன்.

சுருக்கெழுத்து, தட்டச்சு ஆகியவற்றில் தேர்ச்சி பெற்ற பெண்மணியார் ஒருவர் அமர்த்தப்பெற்று வேலையின்மையால் வேறு அலுவலகத்துக்கு மாற்றப் பெற்றனர் என்றுங் கேள்வியுறுகின்றேன்,

தவத்திரு குன்றக்குடியடிகளார் விரைவிலே திரு பாவாணர் அவர்களுக்கு அலுவலகமும் துணைவர்களும் அமர்த்திக்

கொடுத்துப் பணியினைத் தொடங்கச் செய்தல் வேண்டுமென்று முயன்று வருகின்றனர் என்பதும் அறிவேன்.

"தமிழ்ப் பேரறிஞர்கட்குப் புலப்படாமல் மறைந்துகிடந்த விரிவாகவும் வியப்பாகவுமுள்ள தமிழ் மொழியறிவுப் பரப்பு பண்டாரகர் கால்டுவெல் எழுதிய 'திராவிட மொழிகளின் ஒப்பியல் ஆய்வு' நூலாற் புலப்படலாயிற்று. தமிழ்ச் சொற்களை யெல்லாம் விடாமல் நிறைவாக எடுத்தாராய்ந்துள்ளனர் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. எனவே தகுதியுடைய அறிஞர் யாராவது இத் துறையில் ஆராய்வதற்கு முன்வரக்கூடுமா என்று எதிர் பார்த்துக் கொண்டிருந்தேம். அப்போது யாழ்ப்பாணம் நல்லூர் திருத் ஞானப்பிரகாசர் தாம் எழுதிய 'மொழியியல் ஆராய்ச்சி' நூலை எமக்கு அனுப்பி வைத்தார். அது ஓரளவு எமக்கு மனநிறைவு அளித்தது. எனினும் மொழியியல் ஆராய்ச்சித்துறை மிகவும் விரிவும் ஆழமுமுடையதாதலால் பழந்தமிழ் இலக்கியங்களைக் கற்று அவற்றைக் கொண்டு நன்கு புரிந்துகொள்ளும் வகையில் மேலும் மொழியியல் ஆராய்ச்சி நூல்கள் வெளிவருதல் வேண்டுமென்று கருதினேம். அந்த நேரத்தில் திரு. தேவநேயனர் யாம் எதிர்பார்த்ததை ஏறத்தாழ முற்றும் நிறைவேற்றியதைக் கண்டு பெருமகிழ்வுற்றேம்.

"சொல்லாராய்ச்சித் துறையில் திரு. தேவநேயனர் ஒப்பற்ற தனித் திறமையுடையவர் என்றும் அவருக்கு ஒப்பாக இருப்பவர் அருமையாகும் என்றும் யாம் உண்மையாகவே நம்புகின்றேம்" என்று மறைத்திரு மறைமலையடிகளார் வழங்கியுள்ள சான்றிதழ் செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 44 பரல் 4இல் காண்க.

பாவாணர் போன்ற அறிஞர் ஒருவரை இத்துறைக்கு இனி நாம் பெறுதல் கூடும் என்று சொல்வதற்கில்லை என்று மறைத் திரு மறைமலை யடிகளார் எழுதியது முற்றிலும் உண்மையே.

பாவாணரைப் போற்றுவதற்குத் தமிழ்நாட்டிலும் மலேயா, இலங்கை முதலிய நாடுகளிலும் ஏராளமான அறிஞர், அன்பர் பெருமக்கள் இருக்கின்றனர். எனினும் நம் தமிழகவரசு அவர் களை இத்துறையில் பயன்படுத்துவதுதான் பெருமைக்குரிய செயற்கரிய சீரிய செயலாகும். எனவே 70 அகவைக்கு மேற்பட்ட அவர்கள்தம் மொழிப் பேரறிவை விரைந்து நூலுருவிற் கொண்டு வருதல் வேண்டுமெனத் தமிழக வரசைப் பணிவன்புடன் வேண்டிக் கொள்ளுகிறேன்.

—பி. சு.

# தமிழிசை முப்பத்திரண்டாம் விழாவும் பண் ஆராய்ச்சி வெள்ளி விழாவும்

தமிழ் நாட்டிலேயே தமிழிசை புறக்கணிக்கப்பட்டு வந்த நிலையில் தண்டமிழிசையை வளர்க்க, செட்டிநாட்டரசர் அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் நிறுவிய தமிழ் இசைச் சங்கத்தின் முப்பத்திரண்டாம் விழா சென்னை, அரசர் அண்ணாமலை மன்றத்தில் திசம்பர் மாதம் 21 ஆம் நாள் தொடங்கியது. ஆண்டுதோறும் இசை விழாவை யொட்டி நடைபெற்று வரும் பண் ஆராய்ச்சிக் கூட்டத்தின் வெள்ளி விழா இவ்வாண்டு கொண்டாடப் பெற்றது. வெள்ளி விழாவை முன்னிட்டுத் தமிழிசைக்குச் செட்டிநாட்டரசர் அவர்களுடன் சேர்ந்து அரும்பாடுபட்ட கோவை **சர். ஆர். கே. சண்முகம் செட்டியார்** அவர்களின் மார்பளவுச் சிலை அண்ணாமலை மன்றத்தின்முன் மண்டபத்தில் திறந்து வைக்கப்பெற்றது.

### சர். ஆர். கே. சண்முகஞ்செட்டியார் அவர்களின் திருஉருவச் சிலை திறப்பு விழா (20-12-1974)

### தமிழ் இசைச் சங்கத் துணைத் தலைவர் செட்டிநாட்டு அரசர் டாக்டர் ராஜா சர் முத்தையசெட்டியார் அவர்கள் நிகழ்த்திய வரவேற்புரை

இவ் விழாவின் காரணமும் முக்கியத்துவமும் சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்களின் திருஉருவச் சிலையைச் சற்று முன்னர் நம் தமிழ் இசைச் சங்கத் தலைவர் அவர்களால் திறந்து வைக்கப்பெற்ற பொழுது குறிப்பிடப் பெற்றன. இங்கு வந்திருப்பவரில் பெரும்பாலோர் சர். ஆர் கே. எஸ் அவர்களைத் தெரிந்தவர்களாகவே இருப்பது நம் யாவர்க்கும் பெருமகிழ்ச்சியினைத் தருவதாகும். அதிலும் முக்கியமாக, சர். ஆர். கே எஸ். அவர்களுடன் 64 ஆண்டுகள் அருகேயே இருந்த நம் சங்கத் தலைவரும், நாட்டுத் தலைவரு மான திவான்பகதூர் நாராயணசாமிப் பிள்ளை அவர்கள், இத் திருஉருவச் சிலையைத் திறந்து வைத்திருப்பது மிகப் பொருத்தமாகும்.

தமிழ் இசைச் சங்கம் தோன்றக் காரணமாக இருந்தவர் களில் சர். ஆர். கே. எஸ். முக்கியமானவர். திரு. பெ. தூரன் அவர்கள் சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்களிடம்

பண் ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட வேண்டியதன் முதன்மையினை வற்புறுத்திப் பேசி, 25 ஆண்டுகளுக்கு முன் பண் ஆராய்ச்சிக் கூட்டம் முதன்முதலில் நடைபெற வழி கோலினார்கள். சர். ஆர். கே. எஸ். அவர்களின் முயற்சியால் 25 ஆண்டுகளுக்கு முன்னர், பண் ஆராய்ச்சிக் குழு ஒன்று அமைக்கப் பெற்றது. அன்று முதல் இருபத்தைந்து ஆண்டுகள் தொடர்ந்து பண் ஆராய்ச்சி நடைபெற்று, இன்று தமிழ் இசைச் சங்கம், பண் ஆராய்ச்சி வெள்ளி விழாவினைக் கொண்டாடுகின்றது. தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளை, திரு. மெய்யப்ப செட்டியார், என் தம்பி திரு. சிதம்பரம் செட்டியார், திரு. டி. எஸ். கச்சாபிகேச முதலியார், திருச்சி திரு. பொ. மாணிக்கவாசகம் முதலான பலர் இங்குள்ளனர். இவர்கள் தமிழிசை வளர்ச்சிக்குத் துணை நின்றவர்கள் ஆவர்.

**தமிழ் இசைச் சங்கத்தின் தொடக்கம்**

தமிழ் நாட்டில் தமிழ்ப் பாட்டு வேண்டும் என்று கூறும் காலம் ஒன்று இருந்தது. இங்கிலாந்து நாட்டில் ஆங்கில இசை வேண்டும் என்று கூறுவது போன்ற நிலை இது. தமிழ் நாடு மேல் சபைத் துணைத் தலைவர் திரு. ம. பொ. சி. போன்றவர்கள் தமிழிசைக்காக வாதாடி வாதாடிப் பேசியே தமிழ் இசை இயக்கம் தோன்றியது.

**மறுபடியும் தமிழ் இசை இயக்கம்**

மறுபடியும் தமிழ் இசை இயக்கம் தொடங்க வேண்டிய காலம் இது. தமிழர்களெல்லாம் மிகக் கவனமாக இருக்க வேண்டும்.

**நன்றி! மகிழ்ச்சி!!**

சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்களின் திரு உருவச் சிலையைத் திறந்து வைத்த தமிழ் இசைச் சங்கத் தலைவர் திவான் பகதூர் திரு. தி. மு. நாராயணசாமிப் பிள்ளை அவர்களுக்குத் தமிழ் இசைச் சங்கத்தின் சார்பாக ஏனையோர் நன்றியையும் என் நன்றியையும் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொண்டு, அவர்களைப் பேசுமாறு கேட்டுக் கொள்கின்றேன்.

**தமிழ் இசைச் சங்கத் தலைவர் திவான்பகதூர் தி. மு. நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் நிகழ்த்திய திருஉருவச்சிலை திறப்புரை**

எனக்குத் தமிழ் இசைச் சங்கம் தந்திருக்கும் பேற்றினை நினைத்து நானே பெருமைப்பட்டுக் கொள்கிறேன். காரணம்

இச் செயலை ஆற்றுவதற்கு நான் பாக்கியம் செய்திருக்க வேண்டும். எனவே, தமிழ் இசைச் சங்கத்தினர்க்கு முதலாவதாக என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் சர். ஆர். கே. சண்முகஞ் செட்டியார் அவர்களை மிக நன்ருக அறிவேன். அவர்களோடு நெருங்கிய தொடர்புடையவன். நீண்ட காலமாகத் தெரிந்தவன். நம் நாட்டில் பிறந்து வளர்ந்த மிகப் பெரிய மனிதர் அவர். நல்ல ஈடும் எடுப்பும் (Stature) உடையவர் அவர்களைப்பற்றி—அவர்கள் பெருமை குறித்து நான் அதிகமாகத் தெரிந்தவனே யானுலும், அவற்றை விவரிக்கும் திறமை எனக்கில்லை எனத் தோன்றுகின்ற காரணத்தால், அச்சத்தோடு என் பணியை ஆற்றத் தொடங்குகின்றேன்.

### தானைத் தலைவர்

சர். ஆர். கே. சண்முகஞ் செட்டியார் அவர்கள் அருந்திறல் வாய்ந்தவர்; கூரிய மதிநுட்பம் உடையவர். இவை எல்லோர்க்கும் வாய்ப்பது அருமையே. அவர்கள் மேலும் சில ஆண்டுகள் வாழ்ந்திருப்பின், பண் ஆராய்ச்சி மேலும் செழித்து ஓங்கியிருக்கும் என்பதில் ஐயமில்லை. செட்டிநாட்டு அரசர் அண்ணுமலைச் செட்டியார் அவர்கள் தொடங்கிய தமிழ் இசை இயக்கத்திற்குத் தானைத் தளபதியாக அமைந்து பணியாற்றியவர் சர். ஆர். கே. சண்முகஞ் செட்டியார் ஆவார்கள். மக்கள் உள்ளத்தை இசை தொடுவதற்குத் தமிழ்ப் பண்களே பாடுவது அவசியம் என்றும், கர்நாடக இசை தமிழ்ப் பண்களில் இருந்து வந்ததே என்றும் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

### பண் ஆராய்ச்சி வெள்ளி விழா

அவர்களின் முயற்சியால் தொடங்கப்பட்டதே பண் ஆராய்ச்சியாகும். பண் ஆராய்ச்சியின் வெள்ளிவிழா ஆண்டில் இவ் வெள்ளி விழா நடைபெறுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னர், சர். ஆர். கே எஸ். அவர்களின் திருஉருவச் சிலை திறப்பு விழா நடைபெறுவது, சிறந்த நிகழ்ச்சியாகும். 24-12-1949 அன்று பண் ஆராய்ச்சியின் தொடக்க நாளன்று சர். ஆர் கே. எஸ். அவர்கள், “நம் முன்னேர்கள் நமக்குத் தந்துள்ள இசையின் உயிர்நாடியான பண்ணேடு சேர்ந்த இசை, மக்களது உள்ளத்தைத் தொடும்படியான ஒரு கலை”

என்று குறிப்பிட்டார்கள். அவர்களோடு நீண்ட காலத் தொடர்புடைய நான், அவர்தம் திருஉருவச் சிலையினைத் திறந்து வைக்கும் பேறு பெற்றமைக்குப் பெருமகிழ்ச்சி யடைகிறேன்.

## பெருவாழ்வு

அவர்களுடைய அரிய பெரிய வாழ்வு குறித்துச் சில சொற்கள் சொல்ல விரும்புகின்றேன். தம் வாழ்நாளின் இறுதியில் நிறைந்த அளவு தமிழ் இலக்கியங்களைக் கற்க முனைந்தார். அம் முயற்சியை முன்னுலேயே தொடங்க முடியாமற் போயிற்றே என வருந்தினர். ஆசிரியரை நியமித்துத் தமிழ் கற்றுக் கொண்டார். தமிழ்ப் புலவர்களையும், இசைப் புலவர்களையும் மிகவும் உபசரித்தார்.

நல்ல ஆற்றல் வாய்ந்த அரசியல் பெருந்தகையாளர். அடுத்து, நல்ல தேச பக்தி நிறைந்தவர். மூன்ருவதாக, நல்ல நிர்வாகத் திறன் படைத்தவர். அடுத்தபடியாக, படிப் படியாக அரசியல் முன்னேற்றம் நோக்கிச் செல்லவேண்டும் என்று திட்டம் இட்டவர். பொருளாதாரத் துறையில்-அதிலும் குறிப்பாக நிதித் துறையில் ஒளிவிட்டுப் பிரகாசித்தவர். எந்தப் பொருள் குறித்தும் நன்ருக விவாதம் செய்து, இறுதியில் தம் கருத்தே வெல்லுமாறு செய்யும் அரிய நாவன்மை வாய்க்கப் பெற்றவர். சொல்வதைச் சுருங்கக் கூறித் தெளிவாக்கி விளக்கம் ஏற்படச் செய்பவர்.

## கொச்சி பெற்ற முன்னேற்றம்

கொச்சியின் திவாஞக அமைந்து இவர் செய்த தொண்டுகள் பல. முதலாவது, கொச்சித் துறைமுகத்தினை உருவாக்கிய பெருமை இவரைச் சேரும். சுதந்திர இந்தியா வின் முதலாவது நிதிமந்திரி (First Finance Minister) இவரே. நிதித் துறை குறித்து அரிய அறிவும் ஆற்றலும் வாய்ந்தவர். மேலை நாட்டுப் பொருளாதார நிபுணர் ஹீன்ஸ் (Heynes) பாராட்டிய அளவிற்கு உயர்ந்து நின்றவர். வெளி நாட்டில் இந்தியப் பிரதிநிதியாகப் பல மாநாடுகளில் சிறப் பாகப் பங்கு கொண்டவர். தொழில் துறையில் இந்தியா தன்னிறைவு கொள்ள வேண்டும் எனப் பாடுபட்டவர். அதற்கென ஒரு தொழிற் கொள்கையினை (Industrial Policy) உருவாக்கியவர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ் (Stafford Gribbs) முதலியவர்களின் நன்மதிப்பினைப் பெற்றவர். பிறர் மனத்

தைக் கவர்வதில் மிகத் திறமை வாய்ந்தவர்; வியாபார நுணுக்கம் அறிந்தவர். 'ஸ்டர்லிங் நிதி' குறித்தெல்லாம் இவர் இந்தியாவின் சார்பில் ஆற்றிய பணிகள் பல. நல்ல துணிவு மிக்கவர். தாம் பெரிதும் மதித்து வந்த காந்தியடிகள், தாகூர் முதலியவர்களிடமே அஞ்சாமல் தம் கருத்துகளைக் கூறுவார்.

### அரசியல் வித்தகர்

அரசியல் அறிஞர் சி. ஆர். ரெட்டி முதலானோர் இவரை நன்கு பாராட்டியுள்ளார்கள். மோதிலால் நேருவால் பாராட்டப் பெற்ற பண்பாளர். நாற்பது வயதிலேயே மத்திய சட்ட சபையின் தலைவராய் விளங்கியவர். வைசிராய் வெல்லிங்டன் இவர்களிடத்தில் பெருமதிப்பு வைத்துக் கொண்டிருந்தார்.

### தமிழ்ப் பணி

தமிழ் மொழியையும், இலக்கியத்தையும் நிரம்பவும் விரும்பிக் கற்றுக் கொண்டு அவற்றின் வளர்ச்சிக்கு உழைத்தவர் இவர். சிலப்பதிகார மாநாட்டைப் பூம்புகாரில் நடத்தினார். பண் ஆராய்ச்சியினைத் திட்டமிட்டுத் தொடங்கிய முதல்வர் (Sole Founder of Pann Research) இவரே. இவருடைய வாழ்க்கையின் பிற்பகுதியில் இவர் ஆற்றிய தமிழ்த் தொண்டே பெரிதும் அனைத்துத் தொண்டுகளினும் பாராட்டத் தக்கது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் துணை வேந்தராக அமர்ந்து தமிழிற்கு இவர் ஆற்றிய பணிகள் பல.

விழா இறுதியில் பேராசிரியர் லெ. ப. கரு இராமநாதன் செட்டியார் நன்றியுரை நவின்றார்.

## (21—12—1974)

### தமிழ் இசைச் சங்கத் தலைவர் திவான்பகதூர் தி. மு. நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் நிகழ்த்திய வரவேற்புரை

### தமிழ் நாட்டிற்குக் கிடைத்த பெரிய மாணிக்கம்

இக் கூட்டத்தினைத் தொடங்கி வைக்க வந்திருப்பவர் உயர்நீதிமன்ற நீதிபதி முகம்மது இஸ்மாயில் அவர்கள். அவர்கள் தமிழ்நாட்டுக்குக் கிடைத்த ஒரு பெரிய மாணிக்கம். இம் மாணிக்கம் எவ்வாறோ தவறித் தில்லிக்குப் போய்விட்டது. மறுபடியும் கடவுள் அருளால் நமக்கே திரும்பி வந்து விட்டது.

எனவே, இடையிற் கிடைக்காமற் போனது இப்போது கிடைத்ததில் மிக அதிகமான மகிழ்ச்சி நமக்கு.

### நாகூரிற் பிறந்த நல்லார்

அவருக்கும் எனக்குமிடையே ஒரு 40 ஆண்டுகால இடைவெளி இருக்கும். தமிழ்நாட்டில், நாகூர்ப் பக்கத்தில் அவர் பிறந்தார். அது பெரியவரிருந்த இடமாகையால், அவர் அருள் இவருக்குக் கிடைத்திருக்கும். அவர் தொடக்க காலம், முதல் இறுதிவரை முதல் வகுப்பிலேயே தேர்ச்சி பெற்ருர். எந்தத் தேர்விலும் இவர் இவ்வாறே தேறினர். நம் அரசினர் கல்லூரியில் படித்து, எம்.ஏ. பட்டம் பெற்ருர். பின்பு அவர் வழக்கறிஞர் பதவியின் ஊக்கத்திற்காகவே, நன்மைக்காகவே, அவர் வழக்கறிஞர் பதவி ஏற்றது நம் நற்பேருகும்.

### இளைஞர்க்கு வழிகாட்டி

அச் சிறு வயதிலேயே மிகத் திறமையாக, வழக்கறிஞர் பதவி வகித்ததுடன் அல்லாமல் இளைஞர்களுக்கெல்லாம் வழி காட்டக் கூடிய ஓர் இடத்திலிருந்தார். இவர் தேசபக்தி மிகக் கொண்டு, பலவற்றில் பங்கு கொண்டுள்ளார். வழக்கறிஞர் பணியில், சில துறைகளில் இவர் நிபுணராகவே திகழ்ந்தார். நம்முடைய அரசியல் அமைப்பில், குடியரசுத் தலைவருக்கு ஓர் அதிகாரமும் இல்லை யென்றும், அதிகாரம் அனைத்தும் அவருக்குத்தான் என்றும் இருவகையாகவும் சொல்லப்படுகிறது. அப்பொருள் குறித்து இவர் மிகவும் அலசிப் பார்த்து, சேலம் விஜயராகவாச்சாரியாரின் சங்கத்திலே நல்லதோர் உரை ஆற்றியுள்ளார். அவ்வுரை யாவருக்கும், மிகவும் பயன்படக் கூடிய ஒன்ருகும்.

1967இல் இவர் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதியாக வந்தார். இவர் சுதந்தரமாகச் செயல்படுதல் (Independency), நடுவுநிலைப்போக்கு (Impartiality), முதலியன நிறைந்து, நீதிபதிக்கேற்ற இலக்கணத்திற்கு இசைந்து விளங்கினர். 32 ஆண்டுகளாகத் தமிழிசைக்குப் பணியாற்றிவரும் இச் சங்கத்திற்கு அவர் வந்தது, எங்களுக்குப் பெரும் ஊக்கத்தினையும், மகிழ்வினையும் அளிக்கின்றது.

### இசைப்பேரறிஞர் பட்டம் பெறும் நல்லார்

முதல் நாள் விழாவில், 'இசைப் பேரறிஞர்' பட்டத்தினை ஒருவருக்கு அளிப்பது நமது வழக்கம். இவ்வாண்டு, நாம்

தருவதாகத் தீர்மானித்து, வரவழைத்திருப்பது, திருவீழிமிழலை நாதசுர வித்வான் திரு. சுப்பிரமணிய பிள்ளை என்பவர்கள்.

பல ஆண்டுகளாக இசையில் ஈடுபட்டு, உலகப் புகழ் பெற்றுள்ளவர். இவரை இத் துறையில் விஞ்சியவர்கள் யாரும் எங்களுக்குத் தெரியவில்லை. அண்ணனும், தம்பியும் சேர்ந்து இசைத்தால், அதைப்போல் நாதசுரம் கேட்கவே முடியாது என்பர். இவர் சேர்ந்து வாசித்தால் ஒத்து வராது என்பர். எனினும், இவர்கள் இதனை ஒரு கலையாகப் பழகிக் கொண்டு, சிறப்புற வாசித்து வருகின்றனர். பலர் இவருக்கு ஏற்கெனவே பல பட்டங்கள் அளித்துள்ளனர். அரசினரால் 'பத்மஸ்ரீ' என்ற பட்டம் அளிக்கப்பட்டது. சங்கீத கலாநிதி, சங்கீத சிகாமணி போன்ற பட்டங்களைப் பல சபைகள் கொடுத்துள்ளன. எனவே இப் பட்டம் அளிப்பதில் எங்களுக்கெல்லாம் மிக மகிழ்ச்சி.

**மாண்புமிகு திரு. எம். எம். இஸ்மாயில் அவர்களின் தொடக்கப் பேருரை**

சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் 32ஆம் ஆண்டு விழாவைத் தொடங்கி வைக்கும் பெருமையினையும் வாய்ப்பினையும் எனக்கு அளித்த தமிழிசைச் சங்கத்தின் தலைவருக்கும் பிற நிர்வாகிகளுக்கும் என்னுடைய உள்ளம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். சங்கத்தாருடைய அழைப்பினை ஏற்றுக் கொள்வதற்கு முன் இந்தப் பொறுப்பை நிறைவேற்ற எனக்குள்ள தகுதியைப்பற்றி நான் சிந்திக்காமலில்லை. இசைக் கலையின் நுட்பங்களையோ, அந்த நுட்பங்களின் அடிப்படையில் பிறந்த பிற நுணுக்க மரபுகளையோ கல்லாதவன் நான். ஆனால், இசையை அநுபவிப்பதற்கு அத்தகைய ஞானம் இன்றியமையாதது அன்று என்பதை யாவரும் ஏற்றுக் கொள்வார்கள். இசையின் இன்பத்தை நுகர்பவர்கள் அனைவரும் அத்தகைய நுட்பங்களை அறிந்தவர்கள் என்று சொல்லிவிட முடியாது. கல்வியறிவு பெருமளவுக்குக் குறைந்திருக்கிற இந்த நாட்டில் இசையின் இன்பத்தை அநுபவிப்பவர்கள் பெரும்பாலோர் இசைக் கலையின் நுணுக்கங்களை அறியாதவர்களே ஆவார்கள். இந்த முறையில் இசைக் கலையின் நுணுக்கங்களை அறியாமல் இசையின் இன்பத்தை மாத்திரம் அநுபவிக்கத் தெரிந்து கொண்டிருக்கிற மக்கள் தொகுதியின் பிரதிநிதியாக நாம் இருப்போமே என்ற எண்ணத்தில்தான் எனக்கு அளிக்கப்பட்ட இந்தப் பொறுப்பினை ஏற்றுக்கொண்டு உங்கள் முன்னால் நிற்கிறேன்.

இசையினுடைய இன்பத்தை நுகரத் தெரியாதவன் மனிதனே அல்லன் என்று சேக்ஸ்பியர் கூறியிருப்பதாகச் சொல்வார்கள். மனித இனத்தின் எந்தப் பகுதியினுடைய வாழ்க்கையிலும் இசைக்கு இயற்கையான ஓர் இடமிருக்கிறது. மனிதவர்க்கத்தின் எந்தப் பகுதியின் வாழ்க்கையிலாவது இசைக்குச் சிறந்ததோர் இடமில்லாதிருக்குமாயின் அந்த வாழ்க்கையைப் பண்பட்ட வாழ்க்கையாகவோ நாகரிக வாழ்க்கையாகவோ குறிப்பிட முடியாது. தமிழனுடைய வாழ்வோ பண்பட்டதாகவும் நாகரிகமானதாகவும் பல்லாயிர மாண்டுகளாக இருந்து வந்திருக்கிறது என்பது அறிஞர்கள் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒன்று. அப்படியானுல், இந்தப் பல்லாயிரம் ஆண்டுகளாக இந்தத் தமிழனுடைய வாழ்க்கையில் இசைக்குச் சிறந்ததோர் இடம் இருந்துதான் இருக்கவேண்டும். 2,000 ஆண்டுகட்கு முற்பட்டதாக நாம் கருதுகிற தொல்காப்பியத்தில இசையைப் பற்றியும், இசைக் கருவிகளைப் பற்றியும் காணப்படுமானுல் அதற்கும் முன்னரே தமிழனுடைய வாழ்வில் இசையும் இசைக் கருவிகளும் இடம் பெற்றிருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு. ஏனெனில், தொல்காப்பியம் ஓர் இலக்கண நூல். இலக்கியத்தை அடுத்துத் தோன்றுவதுதான் இலக்கணம். தொல்காப்பியம் அல்லாமல், பழம்பெரும் நூல்கள் பலவற்றிலும் இசையைப் பற்றியும் இசைக் கருவிகளைப்பற்றியும் பெருத்த அளவில் மிக நுணுக்கமான விவரங்களோடு பேசப்பட்டிருக்கின்றன. ஆனுல், ஏதோ காரணத்தினுல் பின்னர்ச் சிலகாலம் தமிழிலே இசைக்கு முக்கியத்துவம் கொடுப்பது குறைந்து வந்திருக்கிறது. தேவாரம் தோன்றியவுடனே, இசை, தமிழிலே தனக்குரிய இடத்தைத் திரும்பப் பெற்று வாழ்க்கையில் ஒளிவிடத் தொடங்கிற்று. அதற்குப் பின்னர்த் தமிழ் நாட்டில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்களின் காரணமாகத் தமிழிசை மங்கி, அரசியல் ஆதிக்கத்தின் காரணமாக முக்கியத்துவம் பெற்றிருந்த மொழிகளிலேயே இந்த நாட்டில் இசை அமைந்துவிட்டது. எப்படி ஆங்கிலேயருடைய அதிகாரத்தின் காரணமாக ஆங்கில மொழிக்கு முக்கியத்துவம் கொடுத்து இந்தியரனைவரும் தத்தம் தாய்மொழிகளை மறக்கத் தொடங்கினரோ—தாய் மொழியில் பேச வராது ஆங்கிலத்தில்தான் பேச வரும் என்று சொல்லிக் கொள்வதிலேயே பெருமை கொண்டனரோ—அப்படியேதான் இதுவும் நடந்தது. ஆங்கிலேய ஆதிக்கத்தை அகற்றும் முயற்சிக்குக் காரணமாக வளர்க்கப்பட்ட தேசீய உணர்வு இந்த நாட்டு மொழிகளின்மேல் பற்றையும் தூண்டிவிட்டது. இந்தச் சூழ்நிலையில். தமிழ்மொழிப் பற்றும் தமிழிசையில்

ஆர்வமும் புத்துயிர் பெற்றன. இந்தப் புத்துயிரின் துடிப்புத்தான் தமிழிசை இயக்கம். ஆகவே இந்த இயக்கம் செய்ததெல்லாம் நாம் மறந்துவிட்ட நம்முடைய ஒப்பற்ற செல்வத்தைப்பற்றி நமக்கு நினைவுறுத்தி அந்தச் செல்வத்தை நுகரும் பயிற்சியை நமக்குச் சொல்லிக் கொடுத்ததுதான். இந்தச் சூழ்நிலையில் தமிழிசை இயக்கத்திற்கு ஏற்பட்ட எதிர்ப்பு, அறியாமையின் காரணமாகவும், அண்மையில் நாம் பழகிக் கொண்டுவிட்ட ஒன்றை விட்டுவிடுவதற்குத் தேவையான முயற்சி எடுத்துக் கொள்ளாமல் அதை விட்டுவிட முடியாது என்று வருகிற அவசர முடிவின் காரணமாகவும் தோன்றியதேயாம். ஆனல், இசையைப் பூரணமாக அநுபவிக்க வேண்டுமானல நாம் தெரிந்திருக்கிற மொழியோடு அது சம்பந்தப்பட்டிருக்க வேண்டும் என்ற உண்மையை மக்கள் உணர்ந்து கொண்ட பொழுது அந்த எதிர்ப்பும் அதற்குக் காரணமாக இருந்தவையும் மறைந்துவிட்டன.

தமிழிசை என்று சொல்லும்போதே ஒரு தனி இனிமை பிறக்கிறது. 'தமிழ்' என்ற சொல்லுக்கே இனிமை என்ற பொருள் உண்டு. பிங்கல நிகண்டு அப்படித்தான் இதற்குப் பொருள் சொல்கிறது. நம் நாட்டுக் கவிஞர்களும் இதே பொருளில் இச்சொல்லைப் பல இடங்களில் ஆண்டிருக்கிருர்கள். அனுமனும் வானர வீரர்களும் சீதையைத் தேடிக்கொண்டு தெற்கு நோக்கிச் செல்கிருர்கள். அப்போது வழியில் ஒரு நகரைக் காண்கிருர்கள். அந் நகரின் செழுமையை வர்ணிக்கப் போந்த கம்பன், அமிர்தத்தை யொத்த உணவுப் பொருள்களும், இனிய தேனும், ஒப்பற்ற குளிர்ந்த மதுவும், இனிய பழங்களின் திரளும், இவைபோல் பிற உணவுப் பொருள்களும் நறுமணம் வீசக் கணக்கில்லாமல் நிறைந்திருந்த நகர் என்று கூறுகிருன். தேனினுடைய இனிமைக்கு உவமை கூறப் போந்த கவிஞன் தமிழையே உவமையாகக் கூறி "தமிழ் நிகர் நறவம்" (கிஷ்கிந்தா காண்டம்—பிலம் புக்கு நீங்கு படலம்-35) என்றே கூறிவிடுகிருன். 'இசை' என்ற சொல்லுக்கு இசைப் பாட்டு என்பதோடு இனிமை என்ற பொருளும் உண்டு. ஆக, தமிழிசை என்னும்போது இனிமையோடு சேர்ந்த இனிமை, இனிமையோடு சேர்ந்த பாட்டு என்ற பொருளே பிறக்கிறது.

இசை, தமிழனுடைய வாழ்வோடு ஒன்றியது. பிறப்பிலிருந்து இறப்பு வரையிலே நடக்கும் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் இசைக்கு இடமுண்டு. அவனுடைய வாழ்க்கையிலே தாலாட்டுக்கும் இடமுண்டு; ஒப்பாரிக்கும் இடமுண்டு.

இவற்றுக்கிடையே ஊஞ்சல் பாட்டு, நலங்குப்பாட்டு, கும்மிப் பாட்டு, ஏற்றப்பாட்டு, ஓடப் பாட்டு என ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும், செயலுக்கும் சூழ்நிலைக்கும் ஏற்பப் பாட்டுக்கள் உண்டு. தான் வேலை செய்யும்பொழுது அதனால் ஏற்படும் சோர்வையும் சிரமத்தையும் மறப்பதற்காகவும் தமிழன் இசையைக் கையாண்டிருக்கிறான். ஒரு கனத்த பொருளைப் பலபேர் சேர்ந்து இழுக்கும்போது அவர்கள் அனைவரும் சேர்ந்து பாட்டுப் பாடிக் கொண்டு இழுப்பதை இன்றும் பார்க்கலாம். ஆக, இசை தமிழனுடைய வாழ்க்கையோடு இயைந்தது.

இயற்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சியில் இருந்தும் தமிழன் ஆடலையும் பாடலையும் கண்டு தானும் பழகினான் என்பதற்குப் பழங்காலத் தமிழ் இலக்கியங்களில பல சான்றுகள் உள்ளன. கபிலர், பாரி என்னும் வள்ளலோடு பறம்பு மலையில் நெடுநாள் வாழ்ந்து அம் மலையின் அழகைக் கண்டு மகிழ்ந்தவர். அந்த மலைப்பக்கத்தில் நிகழ்ந்த காட்சி ஒன்றை ஆடலும் பாடலுமாக அழகுபெறச் சித்திரித்துக் காட்டுகிறார்கள். மலைமேல் வளர்ந்து அசைந்து ஆடிக்கொண்டிருக்கின்ற மூங்கில்களில் வண்டுகள் உண்டுபண்ணியிருக்கும் துளைகளின் வழியாகச் செல்லும் காற்றின் ஓசை புல்லாங்குழலின் ஓசையாக அமைகிறது. அழகிய அருவியின் குளிர்ந்த நீர்வீழ்ச்சியினால் எழுகின்ற இனிய ஓசையே மத்தளங்களின் செறிந்த முழக்கமாக ஆகிறது. கூட்டமாகவுள்ள கலைமான்கள் தாழ எழுப்பும் ஓசையே பெருவங்கியம் என்னும் இசைக்கருவியின் இசையாக அமைகிறது. மலைப்பூஞ்சாரலில் உள்ள வண்டுகளின் ரீங்காரமே யாழின் இசையாக அமைகிறது. இவ்வாறான, இனிய இசைகள் பலவற்றைக் கேட்கும் குரங்குகள் அவையினராக அமர்ந்து ஆரவாரம் செய்கின்றன. இந்தச் சூழ்நிலையில் அந்த மலைகளில் வாழ்கின்ற மயில்கள் நடனமாடுகின்றன. ஆக அரங்கில் புல்லாங்குழல், மிருதங்கம், பெருவங்கியம், யாழ் என்னும் வாத்தியங்கள் ஒலிக்கக் குரங்குகள் அவை கூடி இருப்ப—மயில்கள் நடனமாடுகின்றன. அரங்கில் விறலியர் புகுந்து நடனம் ஆடுவதைப் போல அமைந்த இயற்கை நிகழ்ச்சிகள் நிறைந்த மலைநாட்டை உடையவன் பாரி என்று கபிலர் பாடும் இந்தப் பாட்டு,

"ஆடுஅமைக் குயின்ற அவிர் துளை மருங்கின்
கோடை அவ்வளி குழலிசை ஆக,
பாடுஇன் அருவிப் பனிநீர் இன்இசை
தோடுஅமை முழவின் துதைகுரல் ஆக,

ணைக்கலை இருக்கும் கடுந்தரற் றாம்பொடு,
மலைப்பூஞ் சாரல் வண்டுயாழ் ஆக,
இன்பல் இமிழ்இசை கேட்டு, கலிசிறந்து,
மந்தி நல்அவை மருள்வன நோக்க,
கழைவளர் அடுக்கத்து, இயலி ஆடுமயில்
னைவப்புகு விறலியின் தோன்றும் நாடன்"

என அகநானூற்றில் இடம் பெற்றிருக்கிறது. (அகநானூறு—களிற்றுயானை நிரை-82)

கபிலர் காட்டும் இந்தக் காட்சியில் ஒரு குறை இருக்கிறது, வாத்தியங்கள் இருக்கின்றன. நடனம் இருக்கிறது. ஆனால், வாய்ப்பாட்டு இல்லை. இந்தக் குறையை நிவர்த்தி செய்கிறார் மணிமேகலை ஆசிரியர் சீத்தலைச் சாத்தனார். வண்டினில் உயர்ந்த சாதியாகிய தும்பி குழல் ஊதுகிறது. வண்டினங்களின் ஒலி யாழிசையாகிறது. வரிக்குயில் பாடுகிறது. மாமயில் ஆடுகிறது. இதனை,

"கொம்பர்த் தும்பி குழலிசை காட்டப்
பொங்கர் வண்டி னம் நல்லியாழ் செய்ய
வரிக்குயில் பாட மாமயி லாடும்
விரைப் பூம் பந்தர்"

என்று பாடுகிறார். (மணிமேகலை பத்தொன்பதாவது—சிறைக்கோட்டம், அறக்கோட்டமாக்கிய காதை; வரிகள்: 57—60). ஆனால், இதிலும் ஒரு குறை இருக்கிறது. அஃதாவது, அவையினர் இல்லை. என்றாலும், இந்தக் குறை நம்மால் நீக்கப்படக் கூடிய குறையே.

தமிழர்களிடையே இந்தக் கலையுணர்வு எந்த அளவுக்கு வளர்ந்திருந்தது என்றால், அவலமும், துயரமும் நிறைந்த ஒரு சூழ்நிலையைச் சித்திரிப்பதற்குக்கூட அச் சூழ்நிலைக்குப் பொருத்தமான பின்னணியாக ஓர் ஆடல்பாடல் காட்சியையே ஒரு பெரும் புலவர் அமைத்துவிடுகிறார். அரண்மனையில் பிறக்க வேண்டிய அரச குமாரன் ஒருவன் மயானத்தில் பிறக்கிறான். அரண்மனையில் அவன் பிறந்திருந்தால் அதனைக் கொண்டாட ஆடலும் பாடலும் கேளிக்கையும் கூத்தும் வேடிக்கையும் விளையாட்டும் நிறைந்திருக்கும். இந்தக் குறையை நிவர்த்திப் பதற்காக இத்தகைய காட்சியொன்றைச் சுடுகாட்டிலும் கவிஞர் அமைத்துவிடுகிறார். ஆனால் இந்தக் காட்சி மன்னருக்கோ பொருந்தும் என்ற தம்முடைய துயரத்தையும் அவர் எடுத்துக் காட்டத் தவறவில்லை. நரியினுடைய குரல் முழவினுடைய

ஓசை ஆகிறது. இறந்தவரைச் சுடும் ஈமத்தீ விளக்காகிறது. இந்த ஒளியிலே முழவின் இசைக்கு ஏற்பப் பேய் நிழல்போல் அசைந்து ஆடுகிறது. இதனைக் கண்டும் கேட்டும் கோட்டான்கள் எப் பக்கத்திலும் அமர்ந்து குழறும் ஒலியில் பாராட்டுகின்றன. இந்தச் சூழ்நிலையிலா இவ் அரசிளங்குமரன் பிறக்க வேண்டும் என்று கவிஞர் பாடுகிருர்.

"வெவ்வாய் ஓரி முழவாக, விளிந்தார் ஈமம் விளக்காக,
ஒவ்வாச் சுடுகாட்டு உயர் அரங்கில் நிழல்போல் நுடங்கிப் பேய்ஆட
எவ்வாய் மருங்கும் இருந்திரங்கிக் கூகை குழறிப் பாராட்ட
இவ்வா ருகிப் பிறப்பதோ இதுவோ மன்னர்க்கு இயல்வேந்தே."

(சீவகசிந்தாமணி—நாமகளிலம்பகம்—309)

என்று சீவகசிந்தாமணியில் அதன் ஆசிரியர் திருத்தக்கதேவர், இடுகாட்டில் சீவகன் பிறந்ததைப் பற்றிப் பாடுகிருர். முழவம் முழங்க, மணிவிளக்கம் நின்றெளிர, அரண்மனை அரங்கில் மகளிர் ஆட, மாந்தர் மகிழ, புலவர் போற்றப் பிறக்க வேண்டிய நீ இந்தச் சூழ்நிலையிலா பிறப்பது என்ற கவிஞனின் இரக்கமும், ஏக்கமும் பாட்டிலே தெற்றெனத் தெரிகின்றன.

சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய பழம்பெரும் காப்பியங்களில் இசையைப் பற்றியும் இசைக் கருவிகளைப் பற்றியும், அவற்றின் ஆசிரியர்களின் அமைதியும் தகுதியும் பற்றியும் காணப்படும் குறிப்புகள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னேயே தமிழர்கள் இந்தக் கலையை எந்த அளவுக்கு ஆழமாகவும் நுணுக்கமாகவும் பயின்று பழகிப் போற்றிப் பாராட்டினுர்கள் என்பதை மிகத் தெளிவாகக் காட்டு கின்றன. படிப்பவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தும் அளவுக்கு இசையின் நுணுக்கங்கள் எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. இப் பெருங்காப்பியங்களல்லாத வேறு பல நூல்களிலும் இசை பற்றிய குறிப்புகள் காணக்கிடக்கின்றன. அவையும் இசைக் கலையில் தமிழன் அடைந்திருந்த உயர்வையும் உன்னதத்தை யும் எடுத்துக் காட்டுவனவாகவே இருக்கின்றன.

ஒன்பதாம் நூற்ருண்டில் வாழ்ந்த கம்பனும் தன்னுடைய ஒப்பற்ற காவியமாகிய இராமாயணத்தில் இசையைப் பற்றியும் இசைக் கருவிகளைப் பற்றியும் காப்பியத்தின் ஊடே பலவிடங் களில் குறிப்பிடுகிருன். ஆடலும் பாடலும் எப்படி அமைந் திருந்தன என்பதை ஓரிடத்தில் வர்ணிக்கிருன். கூத்தர் ஆடுமிடங்களில் எல்லாம் மார்ச்சனை அமைந்த மத்தளத்தின் இனிய ஓசையும், மகளிரின் பாட்டின் ஓசையும், பாடும் பண்ணுக்கு ஏற்ப வீக்கப்படுகின்ற நரம்புக் கருவிகளின்

அபூர்வமான இசையும், கைகளினால் தாள மிடுவதனாலான ஓசையும், கணுக்களைக்கொண்ட புல்லாங்குழலின் இனிய ஓசையும் விண்ணும் மருளும்படி விம்மி எழுந்தன.

"மண்ணும் முழவின் ஒலி, மங்கையர் பாடல் ஓதை,
பண்ணும் நரம்பின் பயில்வார் இசை பாணி ஓதை
கண்ணும் முடைவேய் இசை, கண்ணுளர் ஆடல்தோறும்
விண்ணும் மருளும்படி விம்மி எழுந்த அன்றே"
(பாலகாண்டம், வரைக்காட்சிப் படலம் 44)

என்று கவிஞன் பாடுகிறான். இந்தப் பாட்டில் பொதுவாக ஆடலையும், வாய்ப்பாட்டையும் நரம்புக் கருவிகளும் புல்லாங் குழலும் எழுப்பும் இசையையும் தாள ஒலியையும் குறிப்பிட்ட கவிஞன் இவற்றைப் பற்றி விரித்தும் நுணுக்கமாகவும் சொல் வதற்கு ஒரு பொருத்தமான கட்டத்தையும் சூழ்நிலையையும் தேர்ந்தெடுக்கிறான். அசோகவனத்தில் இருக்கும் சீதையைக் காண இராவணன் வருகிறான். வருபவனோ தேவர்களையும் வென்று மூவுலகங்களையும் ஆள்பவன். அவனுடைய வரவு அவனுடைய அந்தஸ்துக்கு ஏற்ப இருக்க வேண்டும். அவன் வருகின்ற நோக்கமோ சீதையின் மனத்தை மாற்றித் தன்னை ஏற்றுக் கொள்ளுமாறு செய்வது. தன்னுடைய அந்தஸ் துக்கும், நோக்கத்திற்கும் பொருத்தமான ஆடம்பரத்தோடும் படாடோபத்தோடுமே வருகிறான். அவன் ஆடலுக்கும் பாடலுக்கும் இடையிலே தான் வருகிறான். இந்தக் காட்சி யைக் கவிஞன் சில அற்புதமான பாட்டுகளால் விரிக்கிறான். பல தொளைகள் பொருந்திய புழையாய் அமைந்துள்ள மூங்கி லாகிய குழலிடத்து உண்டாகும் மெத்தென எழும் இசை யானது இசைப் பாட்டிற்குரிய இயல்பில் பிறழாமல் ஒத்துப் பெருகி ஓட, இளம் மகளிர்களுடைய கண்டத்தின் குரலும் இனிமையாக அத்தகைய வேய்ங்குழலுக்கு ஒத்துப் பாட, கின்னர சாதியார் முறைப்படி அளந்தெடுத்து இசைத்த சுரங்களோடு நிறைவு பெற்ற யாழின் இசையும், சிறு பருக்கைக் கற்களோடு கூடிய சலங்கைகளையுடைய பாண்டில் என்னும் தாளக் கருவியைத் தழுவி ஒலிக்கும் மத்தளத்தோடும் ஒத்து இசைத்துப் புற்றில் வாழும் பாம்பும் விடத்திற்குப் பதிலாக அமிர்தத்தைச் சொரிய அண்டத்தையும், வையத்தையும் அவ்விசை அளப்பது போலப் பரவ இராவணன் வருகிறான்.

'தொளை உறு புழைவேய்த் தூங்குஇசைக் கானம்
துயலுறுது ஒருகிலே படர,
இளையவர் மிடறும் இக்கிலே இசைப்ப,
கின்னரர் முறைசிறந்து எடுத்த

கிளை உறு பாடல், சில்லரிப் பாண்டில்
தழுவிய முழவொடு கெழுமி,
அளை உறும் அரவும் அமுதுவாய் உகுப்ப
அண்டமும் வையமும் அளப்ப".

(சுந்தரகாண்டம், காட்சிப் படலம் 84)

என்பது கம்பனுடைய பாட்டு. இப் பாட்டிலே பல நுணுக்கங்களையும் அழகுகளையும் காண்கிறோம். இசையின் இனிமைக்கே அடிப்படையான வாயால் பாடும் பாட்டு கருவிகளிலிருந்து எழுப்பப்படும் ஓசையோடு இணைந்தும் இசைந்தும் இருக்க வேண்டிய பாங்கு எடுத்துக்காட்டப்படுகிறது. புல்லாங்குழல், முழவு, சில்லரிப் பாண்டில் என்னும் இசைக் கருவிகளைப் பற்றியும் குறிப்பிடப்படுகிறது. கின்னர சாதியார் என்று குறிப்பிட்டேன். கின்னரம் என்பது ஒருவகை யாழும் கூட. கின்னரம் என்பது ஒரு வகைப் பறவையையும் குறிக்கும். கின்னர கீதம், கின்னரப் பறவை கேட்டு வருதற்குரிய கீதம் என்றும் பொருள் தரும். இவையெல்லாம் இப் பாட்டில் இடம் பெற்றிருப்பதாகக் கொள்ளலாம். இவற்றிற்கும் மேலாகக் கவிஞன் ஓர் அற்புதத்தைச் செய்கிறான். இசையிலே சராசரங்கள் அனைத்தும் ஈடுபட்டு, பகைமை கொண்ட விலங்குகளும் தத்தம் பகைமையை உணராமல் தலைதடுமாறி மயங்கியிருந்ததைப் பரஞ்சோதி முனிவர் எடுத்துக்காட்டியதை முன்னர்க் கண்டோம். கம்பனோ அதற்கும் மேலே ஒருபடி போய் விடுகிறான். எப்பொழுதும் விடத்தையே சொரியும் பாம்பு இசையிலே ஈடுபட்டு விடத்திற்குப் பதிலாக அமிர்தத்தையே சொரிய ஆரம்பித்துவிடுகிறது.

இந்த இடத்தில் இசைக்கு இஸ்லாத்தில் என்ன இடமிருக்கிறது என்பதைப் பற்றிச் சிறிது குறிப்பிடுவது பொருத்தம் என்று நினைக்கிறேன். இன்றும்கூட வட இந்திய சங்கீதம் எனப்படும் இசையிலே வல்லுநர்கள் பலர் முஸ்லீம்களாக இருந்த போதிலும் இஸ்லாத்தில் இசைக்கு இடமில்லை என்ற ஒரு தவறான எண்ணம் பரவலாகவே இருக்கிறது. இசையில் ஈடுபடாத மனிதன் நாகரிகமானவன் என்று சொல்வதற்கே அருகதை யற்றவன் என்ற நிலையில் உலகிலேயே சிறந்ததொரு நாகரிகத்தைப் பிறப்பித்த இஸ்லாம்; இசைக்கு இடமளிக்கவில்லை என்று சொல்வது தர்க்க ரீதியாகக்கூடப் பொருந்தாது. கீழ்த்தரமான உணர்ச்சிகளைத் தூண்டக்கூடிய இசையைத்தான் இஸ்லாம் தடுக்கிறதே அன்றி நல்லுர்வுணகளைத் தோற்றுவிப்பதும் நற்பயன்களை விளைவிப்பதுமான இசையை இஸ்லாம் அனுமதிப்பதுடன் ஆதரிக்கவும் செய்

கிறது. முஸ்லீம்கள் இசையைப்பற்றிய அற்புதமான நுணுக்கங்களைக் கொண்ட பல பெரும் நூல்களைச் செய்திருக்கிறார்கள்.

இஸ்லாமிய ஞானப் பேரறிஞர்களில் தலைசிறந்தவர்களில் ஒருவராகக் கருதப்படுபவர் இமாம் கஸ்ஸாலி என்பவராவார். அவர் கி.பி. 11-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர். அவர் எழுதிய "இஹ்யாவு உலாமுத்தீன்" என்ற அற்புதமான நூலில் இசையைப் பற்றிய ஒரு பிரிவும் இருக்கிறது.

இப்படி இசையைப்பற்றி நூல்கள் வரைந்ததோடல்லாமல் இசையைப் பயின்ற வல்லுநர் பலருடைய வளமிக்க வரலாற்றைச் சரித்திரத்தில் காண்கிறோம். இஃதன்றியும் தமிழ் நாட்டில் இசையோடு பாடக்கூடிய பாடல்களை உருவாக்கிய முஸ்லீம் மேதைகள் பலர் இருந்திருக்கிறார்கள். இராகம், தாளம் ஆகியவற்றைக் குறிப்பிட்டு மெட்டமைத்துப் பல பதங்களையும் கீர்த்தனங்களையும் பாடியிருக்கிறார்கள். அருணகிரி நாதருடைய திருப்புகழ் தான் எல்லாருக்கும் தெரிந்தது. அதற்குச் சிறிதும் குறைந்ததல்லவென்று சொல்லத் தக்க திருப்புகழ் ஒன்றை முசுலீம் புலவர் ஒருவர் பாடியிருக்கிறார். அவர், காயற் பட்டினத்தைச் சேர்ந்த காசிம் புலவர் என்பவராவர். அவர் பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். முருகனைப் பற்றி அருணகிரிநாதர் திருப்புகழ் பாடியதுபோல நபிகள்நாயகத்தைப்பற்றி இவர் திருப்புகழ் பாடி யிருக்கிறார். மேலும், சவ்வாதுப் புலவர் எழுதிய ஏகத் திருப்புகழ், அப்துல் காதிறுப் புலவர் எழுதிய சந்தத் திருப்புகழ், செய்யிது முகியித்தீன் கவிராயர் எழுதிய முகயித்தீன் ஆண்டவர் திருப்புகழ், அசனலெப்பை எழுதிய நவரத்தினத் திருப்புகழ், பிச்சை இப்ராஹிம் புலவர் எழுதிய ஆதமலைத் திருப்புகழ் ஆகியவையும் இருக்கின்றன.

இராமநாடகக் கீர்த்தனை, நந்தன் சரித்திரக் கீர்த்தனை, திருவிளையாடற் புராணக் கீர்த்தனை ஆகியவை, பெருங்காப்பியங்களைச் சுருக்கமாகப் பாடி நிற்றல்போல் உமறுப் புலவரின் சீறாப்புராணத்தைக் கீர்த்தனைச் சுருக்கமாக, செய்யிது அபூபக்கர் புலவர் என்பவர் சீருக் கீர்த்தனம் என்ற பெயரில் பாடியிருக்கிறார். ஹமீத் இப்ராஹீம் என்ற இயற்பெயர், வண்ணக் களஞ்சியப் புலவர் என்று மாறும் அளவுக்கு வண்ணங்களை ஒருவர் பாடியிருக்கிறார். அம்மானை, சிந்து, தாலாட்டு, கும்மி என்று பல படைப்புகளை முஸ்லீம் புலவர்கள் செய்திருக்கிறார்கள். இம்மாதிரி எத்தனை எத்தனையோ

படைப்புகள் போற்றுவாரும், பாதுகாப்பாரும் இன்றி இன்று கிடைப்பதற்கரியனவாக ஆகிவிட்டன.

மேற்கூறிய அனைத்தும் தமிழிசை இயக்கத்தின் அரும் புதையல் ஆகும். அதனுடைய பழைமையும், பாரம்பரியமும், வழக்கும் வளப்பமும், சிறப்பும் செம்மையும், எழிலும் இனிமையும், தமிழர்களாகிய நம்மனைவருக்கும் சொந்தம்; சொத்து. அவற்றைப் பாராட்டிப் போற்றிப் பாதுகாத்துப் பெருக்கி வளர்ப்பது நம்முடைய கடமை. முதிர்ச்சி அடைந்துவிட்ட தமிழ் இசைச் சங்கம் இந்த ஆக்கவேலையின் எல்லையை மேலும் மேலும் பரப்பிக் கொண்டே போகவேண்டும்.

---

திருவீழிமிழலை திரு. எஸ். சுப்பிரமணிய பிள்ளை அவர்களின் தலைமையுரை

தமிழ் இசையானது, இறைவனது திருஉருவே என்பதும், அவ் இறைவன் தோன்றிய காலத்திலேயே தமிழ் இசையும் தோன்றியுள்ளது என்பதும் ஆன்றோர் அறிந்து கண்ட உண்மைகளாகும். இதை நன்கு உணர்ந்த திருஞானசம்பந்த சுவாமிகள், தாம் பாடி அருளிய திருவீழிமிழலைத் தேவாரத் திருப்பதிகத்திலே,

"பண்ணும் பதமேழும் பலவோசைத் தமிழவையும்
உண்ணின்ற தோர்சுவையும் உருதாளத் தொலிபலவும்
மண்ணும் புனலுயிரும் வருகாற்றுஞ் சுடர்மூன்றும்
விண்ணும் முழுதானு னிடம்வீழிம் மிழலையே."

என்று பாடியுள்ளார்கள். அதுகொண்டு, இறைவனது உருவமே தமிழிசை என்பதை உணர்கிறோம்.

அதே போல், அவ் இறைவன், தன்னைத் துதித்து, மாந்தர்கள் நற்பேறு பெற அவரது உருவின் ஆறு ஆதார ஸ்தானங்களில் அமைந்த ஏழு இசையுடன் கூடிய இன்பம் பல ஓசை தரும், பேரின்பத் தமிழ் இசைப் பாடல்களான மூவர் தேவாரங்கள், திருத்தாண்டகங்கள், மணிவாசகர் அருளிய திருவாசகம், மற்றும் திருப்புகழ், பிரபந்தங்கள், பிற்காலத்தில் தோன்றிய முத்துத் தாண்டவர், அருணாசலக் கவிராயர், மாம்பழக் கவிராயர், சுவாமிநாதக் கவிராயர், கோபால கிருஷ்ண பாரதியார் முதலியோரின் கீர்த்தனங்கள், தருக்கள், பதங்கள், வண்ணங்கள், சிந்துகள் என எண்ணற்ற வகையில் தமிழ் இசைப் பாடல்கள், அக்காலத்தில் உள்ள இசை வல்லுனர்களாய் இருந்த பல இசை அறிஞர்களால் இறைவன்

அருள்வேண்டி, அவ் விறைவன் திருத்தலங்களிலும், இசை யரங்குகளிலும் இறைவனைத் துதித்துப் பாடி வந்த மரபு மறைந்து, "பழையன கழிதலும் புதியன புகுதலும்" என்ற மொழிப்படி கால மாறுபாட்டால் மாறியது.

இன்பத் தமிழ் மொழியில் தன்னைத் துதிக்க நற்பேறு அடையும் வாய்ப்பையே மக்கள் இழந்துவிட நேரும் என்று அருள் நோக்கம் கொண்ட இறைவன், தம் தண்ணருளால் அமைந்த இசைப் பாடல்களை நிலை நாட்டவே, பெருமதிப்பிற் குரிய உயர்திரு செட்டிநாட்டு அரசர் ராஜா சர். மு. அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் திரு உருவில் தோன்றித் தமது முக்கண் நோக்காக உயர்திரு. சர் ரா. க. சண்முகம் செட்டியார் அவர்களையும், உயர்திரு. சி. எஸ். இரத்தினசபாபதி முதலியார் அவர்களையும், உயர்திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களையும் உறுதுணையாகக்கொண்டு, சென்ற முப்பது ஆண்டுகளுக்கு முன்பு, இத் தமிழ் இசைச் சங்கத்தை நிறுவினர்.

## பண் ஆராய்ச்சி வெள்ளி விழா

(22—12—'74)

விழாத் தொடக்கத்தில் சங்கத் தலைவரான

திரு. தி. மூ. நாராயணசாமி பிள்ளை அனைவரையும் வரவேற்றார்

## உயர்நீதிமன்ற நடுவர் மாண்புமிகு எஸ். மகராசன் அவர்கள் நிகழ்த்திய தொடக்கவுரை

### நாதசுரக் கலையின் மேன்மை

உலகத்திலேயே ஈடும் எடுப்பும் இல்லாத இசைக் கருவி யென்றால் அது நாதசுரம். அதிலே மிக்க புலமை வாய்ந்த தலைவர் அவர்களே! அழகிய மணவாளனாக இங்கே வீற்றி ருக்கும் என் இளநண்பர் தி. மூ. நாராயணசாமி பிள்ளை அவர்களே! அண்ணாமலை வள்ளல் மரபிலே தோன்றிய செட்டி நாட்டரசர் அவர்களே! திரு. சிதம்பரம் செட்டியார் அவர்களே! இசை வாணர்களே! பெரியோர்களே! நேற்றுப் பேசிய என் மாண்புமிகு தோழர் இஸ்மாயில் அவர்கள் எனக்கு இசை நுணுக்கங்கள் தெரியாது; ஏதோ இரசிகன் என்ற முறையில், இரசிகப் பெருமக்களின் பிரதிநிதியாக வந்து நான் இதைத் திறந்து வைக்கிறேன் என்றார். நானும் அப் பட்டியலில் சேர்பவனே. நான் ஒரு 'தெர்மாமீட்டர்' போல, அது, காய்ச்சலின் அளவைக் காட்டுமேயொழிய, காய்ச்சலின் விவரம் அறியாது. அதைப் போல, ஒரு நல்ல சங்கீதம் இல்லை

யெனில் நான் குத்துக் கல்லாக, விறகுக் கட்டைபோல் அமர்ந் திருப்பேன். ஆனால் நல்ல சங்கீதம் எனில், அது என் செவிக்குள் புகுந்து உடம்பையெல்லாம் ஓர் ஆட்டு ஆட்டி விடும். நரம்புக்குள்ளே அந்த இசை புகுந்து, என் உடலையே வேறு ஒரு பொருளாக ஆக்கிவிடுகிறது. அப்பொழுது ஓகோ இது ஒரு நல்ல இசை போல இருக்கிறது என ஊகித்துக் கொள்வேன். உண்மையிலே 'பாப்' இசையை என்னால் ஒரு நொடியும் கேட்க முடியவில்லை.

**கல்லைப் பிசைந்து கனிவிக்கும் இசை**

என் பேராசிரியரான டி. கே. சி. அவர்கள் இதனைப்பற்றி, இஃது இளக்கமான மனத்தினையும் கல்லாக்கி விடும். இதனை வைத்துச் சுவர் எழுப்பலாமென நகைச்சுவையாகக் கூறுவார். ஆனால், நல்லிசை, மனமாகிய கல்லைப் பிசைந்து கனியாக்கி விடுகிறது. அப்படி நம்மோடு நெருங்கி உறவு கொள்ளும் பாங்கு இசைக்கலைக்கு இருக்கிறது.

**உள்ளந்தொடும் இசை**

இப்பொழுது இங்கு உள்ள 'டைரக்டர்' அருணாசலம் அவர்கள் கூறுவார். அவர் ஒருமுறை டி. கே.சியிடம் ஒரு பாகவதரை அழைத்துப் போயிருந்தாராம். அப்பொழுது ஒரு கம்பராமாயணப் பாடலை டி. கே. சி. அவர்கள் பாடிக் காட்டி னாராம். பாகவதர் வெளியில் வந்த பிறகு இவரிடம், "எங்க ளால் பாட முடியாத அளவுக்குச் 'சீங்கராபரணம்' அவ்வளவு சுத்தமாக இருந்தது" என்று கூறினாராம். டி. கே. சிக்கு இசை உணர்வு உண்டேயொழிய ஞானமில்லை. நான் அவ ரிடம் ஒரு முறை, "இவ்வளவு சிறப்பாக நீங்கள் பாட முடிவ தெப்படி?" என்று கேட்டபொழுது, அவர் "நான் ஒருபாடலைப் பாடும்பொழுது அந்த உணர்ச்சியிலேயே மூழ்கி நின்று விடு கின்றேன். அந்த உணர்ச்சியே என் இதயத்தில் வந்து நின்று ஒரு சங்கராபரணமாகவோ, சாவேரியாகவோ, பைரவி ஆகவோ ஒரு வடிவம் கொடுத்து விடுகிறது என்று கூறினர். எனவே உணர்ச்சியற்றுப் பாடுதல் கழைக் கூத் தாடித் தனமாக அமைந்துவிடும். உள்ளத்தே உணர்ச்சி பொங்கப் பாடினோமேயானால், அதுவே அந்த இராகத்தினை, அதன் பாவத்தினை அமைத்துக் கொடுத்து விடுகின்றது.

**உணர்ச்சி மயமாக்கும் உயர் இசை**

நாயகன், நாயகி பாவத்திலே முத்துத்தாண்டவர் பாடல்கள்போல் வேறு எந்த மொழியிலே உள்ளது?

இறைவன் வருகிருர்? அவரைப் பார்த்துக் காதல் கொண்டவள் பாடும் கட்டம்:

தெருவில் வாராளுே என்னைச்
சற்றே திரும்பிப் பாராளுே.

இதனை ஜெயம்மாள் பாடக் கேட்டால் வேறு உலகத்துக்கே நாம் போய்விடுவோம். இப்படி நம்மை ஓர் உணர்ச்சி மயமாக்கி விடும் நமது தமிழ் இசை; பாவ வேறுபாடுகளை அவ்வளவு துல்லியமாக எடுத்துக் காட்டி விடும் இசை.

**இசைக்கு மொழி தேவையா?**

இங்கேதான் மொழிப் பிரச்சினை பிறக்கிறது. இசை யாவர்க்கும் பொதுவானது; ஆகவே எந்த மொழியில் இருந்தாலென்ன எனக் கேட்கின்றனர். நம் மொழியில்தானே நமக்கு நன்கு விளங்கும். இல்லையென்ருல், சாகித்யங்களே தேவையில்லையே? வெறும் இராக ஆலாபனையுடன் நிறுத்திக்கொள்ளலாமே? என் அருமை நண்பர் சோமு இராகபாவம் அர்த்த பாவம் என்று ஓர் அருமையான கட்டுரையைக் கல்கி ஆசிரியராக இருந்தபொழுது எழுதியிருந்தார். ஒரு சாகித்யத்தை எடுத்துக் கொண்டால், இராகத்திற்குத் தனி பாவமுள்ளது; ஒரு சொல்லுக்குத் தனிப்பொருள் உள்ளது. எனவே, கட்டாயம் தமிழில்தான் இருந்தாக வேண்டும் நமது தமிழிசை. இதனைத் தமிழ் நாட்டில்தான் நாம் சொல்லித் தொலைக்க வேண்டியுள்ளது.

**மிகத் தொன்மை வாய்ந்த இசை**

"பண்ணிடைத் தமிழொப்பாய்,
பழத்திடைச் சுவையொப்பாய்"

என இறைவனை அனுபவித்திருக்கிருர் சுந்தரர். பண்ணிலே தமிழைக்குழைத்துக் கொடுக்கும்போது இராகபாவமும், அர்த்த பாவமும் ஒன்ருேடு ஒன்று இணைந்து நம்மை, காலம், இடம் என்ற கட்டுப்பாட்டிலிருந்து விடுவித்து, ஆனந்த நிலையை அடையும்படி செய்கிறது. 40,000 டாலர்களில் ஒரு விண் வெளிக் கப்பலைச் செய்யலாம். ஆனல், சங்கராபரணத்தையோ, மேகராகக் குறிஞ்சி போன்றவற்றையோ எத்தனை செலவழித்தாலும் உண்டாக்க முடியாது. தமிழிசை 2000, 3000 ஆண்டுகளாகவே வளர்ந்து கொண்டு வந்துள்ளது எனக் கூறுவதே தவறு.

ஜூலியன் ஹக்ஸலே என்ற விஞ்ஞானப் பேராசிரியர் மனித இனம் தோன்றி 48,000 ஆண்டுகள் ஆகிவிட்டன என்று கூறினர். அடிக்கடி டி. கே. சி சொல்லுவார், தமிழிசை யானது 30,000 ஆண்டுகளாக வளர்ந்து வருகின்றதென்று. தொல்காப்பியம்தானு நமக்கு Landmark ? அஃது இலக்கணம். அதற்கு முன்னமேயே இலக்கியம் இருந்து வந்திருக்கின்றது. மேலும், அகத்தியமும் இருந்துள்ளது. இலக்கியத்திற்கு முன்னுலேயே, தமிழிசை வளரத் தொடங்கிவிட்டது.

**பொருளுணர்ந்து பாடுதல்**

அரிச்சுவடியைக் கூடத் தோடியில் பாடலாம். ஆனல் பொருள் உள்ளதாக இருக்க வேண்டும். உலகத்தில் வேறு எங்கும் செய்யாத ஒன்றினை நம் ஞானிகள் செய்துள்ளனர். அது மட்டுமன்று. இயற்கையன்னைக்கு, ஒவ்வொரு காலத்திலே ஒரு பாவம் உள்ளது எனக் கண்டு பிடித்தனர். பல மொழிகளை ஆராய்ந்து பார்க்க வேண்டும். கோதண்டபாணிப் பிள்ளை 'பழந்தமிழ் இசை' என்ற நூலில் என்ன அழகாக எழுதி யுள்ளார். அந்நூலினை ராஜா இங்கே அச்சுப் போடவேண்டும். அந்தந்த நேரத்திற்கேற்ருற்போல் ஓர் இராகம் வகுத்தது நம்பமுடியாத ஒன்று.

அந்தப் பாவங்களுக்கேற்ருற்போல் இலக்கியத்தையும், கவிதையையும் பாட வேண்டும்,

செவ்வழி தற்காலத்திய எப்பண்ணுேடு சேர்ந்தது எனச் சோமுவிடம் கேட்டேன். அவர் யதுகுல காம்போதிக்குக் கிட்டத்தட்ட வருமென்ருர். இதை எங்கே பாடலாம்? நெய் தல் நிலத்தில், கருக்கல் நேரத்தில் பாடலாம். தொல்காப் பியத்தில் இவ்வாறு சொல்லப்பட்டுள்ளது. ஏக்க பாவத்தில் இதனைப் பாட வேண்டும். நெய்தல் யாழ் என ஒரு கருவியும் இருந்தது.

'எற்பாடு நெய்தலாகும்'

என்பது தொல்காப்பியச் சூத்திரம்.

**டி. கே. சி. சொல்லிய திருப்பதி மொட்டைக் கதை**

நம்மை ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு மோகம் பிடிக்கும். நமக்கு வரவேற்கும் தன்மை மிக உண்டு. அவற் றைக் 'காப்பி' யடிக்கும் திறமையும் உண்டு.

டி. கே. சி. சொல்வார்கள்: சடை பின்னி, தாழம்பூ சூட்டி, இராக்கொடி வைத்து, திருப்பதி மலைக்குப் போவார்கள். திரும்பி வரும்பொழுது சுத்தமாக மொட்டையடித்துக் கொண்டு வந்துவிடுவார்கள். இதுபோல் இங்கேயிருந்த தமிழிசை வடக்கே போய், ஹிந்துஸ்தானி இசையாக நம்மிடமே திரும்பி வந்து விட்டது. உங்களுக்கெல்லாம் தெரிந்த கதை ஒன்று. Hamilton Bridge என்று ஒன்று இருந்தது. அதனை அம்பட்டன் Bridge எனச் சொல்லப்போய் மொழி பெயர்க்கப் படும்பொழுது Barber's Bridge என்றானது.

**கம்பன் காட்டும் கவின்மிகு தமிழ்ப்பண்**

இத் தமிழிசையில் பணியாற்றுகின்ற யாவரையும் நான் மிக மதிக்கின்றேன். வழக்கறிஞர்களின் வாதத்திறமையினை மிஞ்சி யுள்ளார்கள் இங்கு உள்ளவர்கள். கும்பகோணம் சுந்தரேசம் பிள்ளையவர்கள் நன்கு வாதாடியுள்ளார்.

கம்பராமாயணப் பாடலில் சீதை வருவதுபோல் ஒரு கட்டம்:

'நைவளம் எனத்தக நன்ண வரலோடும்' என்று சீதை யின் நடை, நைவளம் போல் நைந்து நைந்து அமைந்தது. நாட்டியத்திற்கே உரிய இராகம் நைவளமாகும்.

தமிழ் நாட்டின் பழைய பண்ணை—ஆற்றுப்படையில் அழகுற இடம் பெற்றுள்ள பண்ணை நைவளம், இங்கிருந்து வடக்கே போய் 'நாட்டை'யாகித் திரும்பவும் இங்கே வந்து 'நட்ட பாடை' என்று வழங்குகின்றது. டி. கே. சி. சொன்ன 'திருப்பதி மொட்டை கதை'தான். இதுபோல் இந்த 30,000 ஆண்டுகளாகவே, தமிழிசைக்கு விபரீதங்கள் நடந்து கொண்டே வந்துள்ளன. மொழி பெயர்ப்பது, பின் மறு மொழி பெயர்ப்பது போன்ற பல நடந்தன. அவ்வளவு புதிய மோகம் நமக்கு.

**உ. வே. சாமிநாத ஐயர் தரும் குறிப்பு**

டி.கே.சி. பல நோட்டுப் புத்தகங்களைத் தம் கையால் எழுதினவற்றை என்னிடம் தந்துவிட்டுப் போயிருக்கிறார். அவற்றில் ஒன்றில், டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் இப் பண்களெல்லாம் மறைந்ததற்கான காரணத்தை 28-1-1940 இல், ஆனந்தவிகடனில், 'என் சரித்திரம்' என்னும்

கட்டுரையில், எழுதியவற்றை டி. கே. சி. அப்படியே எழுதி யுள்ளார் :

“சங்கீதத்திலும், சாகித்தியத்திலும் வல்ல வித்வான்கள் பலர் தமிழில் பல சாகித்யங்கள் இயற்றியிருக்கின்றார்கள். பாடுவோரும், பாராட்டுவோரும் இல்லாமையால் அக் கீர்த்தனங்கள் மறைந்து போயின. ஆயிரக் கணக்கான அத்தமிழ்க் கீர்த்தனங்கள் இந்நாட்டில் முன்பு வழங்கி வந்தன. கர்நாடக இராகத்தின் கதிக்கு மிகவும் பொருத்தமாக அவை அமைந்திருந்தன. அன்று நான் கேட்ட அவை இன்று இருந்த இடம் தெரியாமல் மறைந்து போய்விட்டன. தமிழில் கீர்த்தனங்களே இல்லை எனச் சிலர் கூறவும் அஞ்சுவதில்லை. எல்லாம் சற்றேறக் குறைய 60 ஆண்டு காலத்தில் நிகழ்ந்த மாறுபாடு. இம்மாறுபாட்டின் வேகத்திலே, லிங்கப்பையரின் சாகித்யங்களும் அகப்பட்டு மறைந்தன. இதற்கு நம்மை நாமேதான் குறை கூறிக் கொள்ளவேண்டும்.”

**இசைத்துறைத் திருமூர்த்திகள்**

தமிழ் இசையில் திருமூர்த்திகள் என்று தியாகையர், தீட்சிதர், சாஸ்திரிகள் ஆகியோரை அழைக்கிறோம். இவர்கள் அற்புதமான சாகித்யங்களை இயற்றியுள்ளபடியால், நான் மிகவும் அவர்களை மதிக்கிறவன். தியாகையர் பாடல்களை நான் கேட்கும்பொழுது விளையாட்டுப் பிள்ளையின் உற்சாகம் ஏற்படும். ஆனால், தீட்சிதர் பாடல்களைக் கேட்கும்பொழுது ஞானநிலையே அடைந்து விடுகின்ற ஓர் அமைதி ஏற்படும். ஆனால் நம்முடைய துரதிருஷ்டம் அவர்கள் தமிழில் கீர்த்தனைகளை எழுதாமல் போனதுதான். ஆனால், அவர்கள் 30,000 ஆண்டுகளாக இருந்த தமிழ் இசையை அடிப்படையாக வைத்து எழுதினார்கள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. நம் அலட்சியத்தால் நாம் இதையெல்லாம் இழந்து வருகின்றோம்.

*‘தண்டா மரையோ டுடன்பிறந்தும்,*
*தண்டேன் நுகரா மண்டூகம்’*

என்றபடி, தாமரையோடு உடனுறையும் வாழ்வு பெற்ற தவளை, அத் தேன் மணம் அறியாத, அறிந்து நுகர முடியாத நிலையில் உள்ளது போன்றே, பண்கள் பலவற்றைப் பெற்ற தமிழனும் அப் பண்ணிசையினைத் துய்க்கும் திறனின்றி வாழ்ந்து வந்தான். இந் நிலையில்—இப்படிப்பட்ட இருண்ட காலத்திலே

தமிழிசை இயக்கத்தினைத் தொடங்கியவர் நம்முடைய அண்ணாமலை வள்ளல் ஆவர். தமிழுக்கும், தமிழ் இசைக்கும் அவர் செய்தது கொஞ்சநஞ்சமன்று. அவர்களை நினைக்கும் போது எனக்கே ஒன்று தோன்றுகின்றது.

## தரம் வாய்ந்த தனிப் பாடல் ஒன்று

நேற்று என் நண்பர் இஸ்மாயில் அவர்கள் இஸ்லாமியத் தமிழ்ப் புலவர்களைப் பற்றி ஒரு பட்டியல் அடுக்கினார். ஆனால், ஒன்றினை மறந்து விட்டார். காயல் பட்டணத்தில், சீதக்காதி என அழைக்கப்பெற்ற `சையத் காதர் என்பவரிருந்தார். அவரைப் பற்றி ஒரு புலவன் பாடியது அண்ணாமலை வள்ளலை எனக்கு நினைவூட்டுகிறது :

'காய்ந்து சிவந்தது சூரிய காந்தி கலவியில்
தோய்ந்து சிவந்தது மின்னார்நெடுங் கண்கள் ஒண்பலநூல்
ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்சம் அனுதினமும்
ஈந்து சிவந்தது மால்சீதக்காதி இருகரமே.'

அண்ணாமலை வள்ளலின் வள்ளன்மைக்கு உள்ளுணர்வாக இருந்தவர் டி. கே. சி. என்பதை மறந்து விடக்கூடாது.

## அண்ணாமலை அரசர் அவர்கள் ஆற்றிய அருந் தொண்டு

தமிழன் எப்பேர்ப்பட்ட தமிழ் இசையை இழந்துவிடுவான் என்ற கழிபேரிரக்கத்தில், ராஜாஜியோடும், கல்கியோடும் பல முறைகள் பேசி, அவர்களையும் இத் தமிழிசைக்கு இழுத்துத் தூண்களாக ஆக்கிய பெருமை ரசிகமணியையே சாரும்.

## பண் ஆராய்ச்சியின் வளர்ச்சி

இப் பண் ஆராய்ச்சிகளை யெல்லாம் வெளியிட்டிருக் கின்றனர். ஒரு 10 ஆண்டுகட்கு உரியனவற்றை நான் படித்தேன். நான் இசையில் போலல்லாமல், இலக்கியத்தில் நன்கு மூழ்கியவன். சென்ற 15 ஆண்டுகளாக இயற்றமிழில் நடந்த ஆராய்ச்சியை இந்த இசைத்தமிழில் நடந்த ஆராய்ச்சி யோடு ஒப்பிட்டுப் பார்த்தபொழுது இசைத்தமிழ் ஆராய்ச்சி ஆயிரம் மடங்கு மேலானது என்பதனைத் தெரிந்து கொண்டேன். இதற்கெல்லாம் தலைமை வகித்த சாம்பமூர்த்தி அவர்களைக் கட்டாயம் நாம் நினைக்க வேண்டும். நிறைகுடம் அவர்கள். அவையில் பலர் அவசரப்பட்டுத் துடுக்குத் தனமாகப் பேசியபொழுதும், மிகப் பொறுமையாக இருந்து,

தர்மராஜாவாகவே இருந்து புலமை நிரம்பிய பண்பை யெல்லாம் காட்டியுள்ளார். அவரால் தமிழ் இசை ஆராய்ச்சி மிகவும் முன்னேறியுள்ளது.

**தாயின் அணைப்பில் சேய் கொள்ளும் அமைதி**

அதைப்போலவே, கும்பகோணம் சுந்தரேசன் அவர்கள். வாதப் பிரதிவாதங்கள் மிக அழகாக இருக்கும். அவ்வளவு சிறந்த இசை அறிவு அவருக்கு. அதைப்போலவே, இவ் ஓதுவாமூர்த்திகள் இருவர், கோதண்டபாணிப் பிள்ளை அவர்கள், வெள்ளைவாரணன் அவர்கள், எல்லாத் துறை களிலும் வல்ல என்அருமை நண்பர் சோமு அவர்கள் எழுதிய கட்டுரை ஆகியவற்றையெல்லாம் மிகவும் பாராட்டவேண்டும். தமிழ் இசை ஆராய்ச்சியிலே, இவை யாவும் மைல் கற்கள். லெ. ப. க்ரு. இராமநாதன் செட்டியார் அவர்களைப் பாராட்ட வேண்டும். சங்கரன் அவர்கள் வீணை தனம்மாள் குடும்பத் திலே தோன்றியவர்கள். இவர்களை யெல்லாம் நீங்கள் எவ்வாறு தேர்ந்தெடுத்து வைத்திருக்கின்றீர்கள் என்பதே எனக்குத் தெரியவில்லை. உரியவர்களைத் தேர்ந்தெடுக்கும் ஒரு வல்லமை ராஜா அவர்களிடத்திலே இருக்கிறது. குழந்தை தன் பயம் நீங்கத் தாயை ஆலிங்கனம் செய்து படுத்திருப் பதைப் போல, மனிதன் பயம் இல்லாமல் போக, இறைவனை இசையினல் புல்ல வேண்டும். பயம் எல்லாம் அப்பொழுது அபயமாகிவிடும். இதனை ஒரு வைணவப் பாடல் கூறுகிறது:

**அபயம் அருளும் அழகுத் திருப்பாடல்**

'நாவுண்டு நீயுண்டு நாமம் தரித்தோதப்
பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ?—பூவுண்டு
வண்டுறங்கும் சோலைமதி லரங்கத்தே உலகை
உண்டுறங்கும் ஒருவன் உண்டு'.

ஆகவே, இந்த அபயத்தை உண்டாக்க வேண்டுமெனில், இப் பண் ஆராய்ச்சிக் கழகம் தழைத் தோங்கிப் பல்லாண்டு பல்லாண்டு வாழ வேண்டும் என வாழ்த்தி எனது நீண்ட உரையை முடித்துக் கொள்கின்றேன்.

**நூல் வெளியீடு**

பின்னர் இசைப் பேரறிஞர் திருவீழிமிழலை எஸ். சுப்பிர மணிய பிள்ளை அவர்கள் தலைமையுரை நிகழ்த்தினர்கள்.

திரு. பெ. தூரன் அவர்கள் பண் ஆராய்ச்சியின் வெள்ளி விழா மலரையும் பண் ஆராய்ச்சித் தொகுப்புரை நூலையும் வெளியிட்டார்.

செட்டிநாட்டரசர் முத்தையா செட்டியார் அவர்கள் நன்றியுரை கூறுகையில் குறிப்பிட்டதாவது :

நீதிபதி மகராசன் அவர்களின் சொற்பொழிவின் முடி மணி (Crown), அவர், டி. கே. சி. அவர்கள் தம் கைப்பட எழுதி வைத்திருக்கும் டாக்டர் உ. வே. சாமிநாத ஐயரவர்கள் "தமிழ்க் கீர்த்தனைகள் பாடுவாரும், பாடக் கேட்போரும் அற்று, நாளுக்கு நாள் மறைந்து கொண்டு வந்து விட்டன" என்று குறிப்பிட்ட குறிப்பாகும். இதுநாள் வரை பலரும் அறியாத செய்தியினை நல்ல நேரத்தில் நல்ல இடத்தில் தெரிவித்தார்கள்.

தமிழிசைக்குப் பண் ஆராய்ச்சிக்கு, பண் இசை பரப்புதலுக்கு நாளும், ஆண்டின் 365 நாட்களும் உழைத்து வருபவர்கள் ஒதுவாமூர்த்திகள் ஆவர். அவர்களுக்கு நம் நன்றி. தமிழ் இசைச் சங்கத்து 'டிரஸ்டிகள்' திரு. அழகு சுந்தரம் செட்டியார், திரு. குழந்தையன் செட்டியார், திரு. மெய்ப்ப செட்டியார், என் தம்பி திரு. மு. அ. சிதம்பரஞ் செட்டியார், திரு. டி. எஸ். கச்சாபிகேச முதலியார், திரு. ஸ்ரீராமன், பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் முதலான பெருமக்கள் அனைவருக்கும் தமிழ் இசைச் சங்கத்தின் சார்பில் மீண்டும் மீண்டும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

---

## வானொலி நிகழ்ச்சி

மார்கழித் திங்களில் நாள்தோறும் காலையில் வானொலிக் கருவியைத் திருப்பியவுடன் 'கோதாஸ் துதி' என்ற ஒரு பகுதி முதலில் வடமொழியில் இசைப் பாடலாக ஒருவரால் பாடப்படுகின்றது.

அதன் இசை நன்றாயிருப்பினும் தமிழ் மக்கள் பொருள் புரிந்து கொள்ளக் கூடியதாக இல்லை. 'கோதாஸ் துதி' வேண்டுமா என்பது ஆராயத் தக்கது.

மேலும் காலத்தால் முந்தியது மணிவாசகப் பெருமான் அருளிய திருவெம்பாவைதான். அதனை முதலில் ஓதாமல் ஆண்டாள் அருளிய திருப்பாவையை முதலில் ஓதும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

தமிழருடைய மனம் நிறைவடையும்படி வானொலி நிலையத்தார் இவற்றுக்கு இனி ஏற்பன செய்வார்களென எதிர்பார்க்கிறோம்.

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

புல்[6]—துளைத்தற்கருத்து வேர்ச்சொல்

புல்லுதல் = துளைத்தல். இவ் வினைச்சொல் வழக்கிறந்தது. புல் = 1. உட்டுளையுள்ள நிலைத்திணைவகை. "புறக்கா ழனவே புல்லென மொழிப." (தொல். மர. 86). 2. ஊனுண்ணு விலங்குணவான தாளுள்ள நிலைத்திணைவகை. "பசும்புற் றலைகாண் பரிது" (குறள். 16). 3. உட்டுளையுள்ள பனை. "அன்றில் புற்சேர்க்கை புக்கு" (கல்லா. 38 : 10). 4. பனை வடிவான நாள் (அனுடம்). (பிங்.). 5. உட்டுளையுள்ள தென்னை. (தைலவ. தைல.). 6. உட்டுளையுள்ள மூங்கில். புல்லாங்குழல் (உ. வ.). 7. புற்போன்ற கம்பம் பயிர். (பிங்.). புல், கம்பம்புல் (உ. வ.). 8. புல்லரிசி. 9. சிறுமை. "புல்லுளை" (கம்பரா. வரைக்காட்சி. 70). புன்மை = சிறுமை, சிறுதன்மை. 10. இழிவு. "புன்கோட்டி" (நாலடி. 255). புல்லன் = இழிந்தோன். "கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளென்ன" (கம்பரா. தாடகை. 72).

ம. புல், க. புல், தெ. புலு.

புல்—பொல். பொல்லுதல் = 1. துளைத்தல். 2. உளியாற் கொத்துதல். பொல் = உட்டுளையுள்ள பதர்.

தெ. பொல்லு, க. பொள்ளு.

பொல்லம் = துளை, ஓட்டை, இழிவு. பொல்லம் பொத்துதல் = 1. நார்ப் பெட்டியின் ஓட்டையடைத்தல். துணிக் கிழிசலை இணைத்துத் தைத்தல். "பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை" (பொருந. 8). பொல்லாப் பிள்ளையார் = உளியாற் கொத்தப்படாத தான்றோன்றிப் பிள்ளையார். பொல்லாமணி = துளையிடப்படாத மணி, மாசிலாமணி.

புல்—புர்—புரை = 1. உட்டுளை. "புரைபுரை கனியப் புகுந்து" (திருவாச. 22 : 3). 2. உட்டுளைப் பொருள். (பிங்.). 3. குரல்வளை. புரையேறுதல் (உ. வ.) 4. விளக்குமாடம். 5. உள்ளோடும் அல்லது உட்டுளைப்புண். 6. பை மடிப்பு அல்லது அறை. (W). 7. கூறுபாடு. "புரைவிடுத் துரைமோ" (சீவக. 1732). 8. (உள்ளீடற்ற அல்லது உண்மையில்லாப்)

பொய். "வடிவிற் பிறந்த புகலும் புரையின்றிக்கே" (ஈடு, 4 : 3 : 9). 9. நொய்ம்மை (கனமின்மை). "புரையாய்க் கனமாய்" (தேவா. 174 : 7). 10. குற்றம். "புரை தீர்ந்த நன்மை பயக்குமெனின்" (குறள், 292). 11. இழிவு. 12. (உட்டுளையுள்ள) வீடு. "புரைபுரை யாலிவை செய்யவல்ல" (திவ். பெரியாழ். 2 : 9 : 1). 13. தவச்சாலை. "புரையுட் புக்கனர்" (கம்பரா. திருவவ. 42). 14. கோவில். "புரைவயிற் புரைவயிற் பெரிய நல்கி" (பதிற்றுப். 15 : 37). 15. வீட்டறை, கொட்டகையறை. ஆக்குப்புரை (உ. வ.). 16. பெட்டியறை. 17. மாட்டுத் தொழுவம். 18. இடம்.

ம. புர, வ. புர. ஒ. நோ: GK poros, passage, L., OF., ME., E. pore, minute opening

புரை = துளை, சிறுதுளை.

புரை—புரைசல் = 1. துளை. 2. குற்றம். 3. மாணிக்கக் குற்றங்களுள் ஒன்று. 4. வலியின்மை. "பிறனுடைய புரைசல் களை எப்படி யறியலாம்" (பஞ்சதந். 64). 5. மருமம் (இரகசியம்). 6. குழப்பம்.

புரையன் = 1. வீடு. 2. இலைக்குடில்.

புரையுள் = வீடு. (பிங்.).

புரைப்பு = 1. குற்றம். "புரைப்பிலாத பரம்பரனே" (திவ். திருவாய். 4 : 3 : 9) 2. ஐயுறவு. "புரைப்பறத் தெளிதல் காட்சி" மேருமந். 107). புரையோர் = கீழோர், இழிந்தோர்.

புரைத்தல் = இன்னுமுரல் (அபசுர) வகை. (திருவாலவா. 57 : 14, அரும்.)

புரைப்படுதல் = மரம் பொந்துபடுதல். "மரம் புரைப் பட்டது" (தொல். உரி. 92, உரை).

பொல் — பொள். பொள்ளுதல் = (செ. குன்றுவி.) 1. துளைத்தல். 2. பொளிதல்.

(செ. குன்றிய வி.) 1. கிழிதல். (W.). 2. கொப்புளம் உண்டாதல். எண்ணெய்ச் சுடர் விழுந்து கை பொள்ளி விட்டது. (உ. வ.).

பொள்ளல் = 1. துளைக்கை. 2. பொளிகை. 3. துளை.

"சிதநீர் பொள்ளற் சிறுகுடத்து நில்லாது
வீதலோ நிற்றல் வியப்பு" (நன். 12)

4. மரப்பொந்து. (பிங்.). 5. அப்பவகை. 6. கொப்புளம். 7. அம்மை வடு. 8. குற்றம்.

பொள்ளாமணி = துளையா மணி.

பொள்—பொண்டான் = எலி தன்னைப் பிடிப்பவர் தன் வளையைத் தோண்டும்போது, தப்பியோட அமைத்திருக்கும் மறைவான பக்க வளை.

பொல் (பொள்)—பொ. பொத்தல் = (செ. குன்ரு வி.) துளைத்தல். "பொத்தநூற் கல்லும்" (நாலடி. 376). (செ. குன்றிய வி.) தீத்துளைத்துக் கொப்புளித்தல். தீப் பட்டுக் கை பொத்துப்போய்விட்டது. (உ. வ.).

பொத்தல் = 1. துளை. 2. கடன். 3. குற்றம்.

ம. பொத்து, க. பொட்டார, து. பொட்ரெ. பொத்தல்—பொத்தர்.

பொத்து = 1. துளைப்பு, துளை. 2. பொந்து. "முதுமரப் பொத்தில்" (புறம். 364). 3. வயிறு. "பொத்தடைப்பான் பொருட்டால் மையல் கொண்டீர்" (தேவா. 188 : 6). 4. பொய். "புல்லறிவு கொண்டு பல பொத்து மொழி புத்தா" (திருவாத. பு. புத்தரை. 77). 5. குற்றம். "பொத்தி னண்பிற் பொத்தியொடு" (புறம் 212). 6. தீயொழுக்கம். (W.).

பொத்து — பொத்தை = பொத்தல். "பொத்தையூன் சுவர்" (திருவாச. 26 : 7).

பொத்து — பொந்து = 1. மரப்பொந்து. "ஆனந்தத் தேனிருந்த பொந்தை" (திருவாச. 13 : 2). 2. எலி நண்டு பாம்பு முதலியவற்றின் வளை.

தெ. பொந்த (b).

பொள்—பொள்ளை = 1. துளை. "பொள்ளைக் கரத்த போத கத்தின்" (திவ். பெரியதி. 5 : 1 : 2).

பொள் — பொளி. பொளிதல் = (செ. குன்ரு வி.) 1. துளைத்தல், துளைசெய்தல். (W). 2. உளியாற் கொத்துதல். "கல்பொளிந் தன்ன" (மதுரைக். 482). 3. பிளத்தல்.

"பொளிந்து தின்சிலே" (விநாயகபு. 22 : 43). 4. இடித்தல். "கற்றரையைப் பொளிந்து பண்ணின கிடங்கினை யுடைய" (மதுரைக். 730, உரை).

(செ. குன்றிய வி.) 1. ஒட்டையாதல். "கண்டவிட மெங்கும் பொளிந்து" (ஈடு. 4 : 1 : 1). 2. பள்ளமாதல்.

பொளித்தல்=1. துளை செய்தல். "மாடத்தாங்கட் சாளரம் பொளித்த கால்போகு பெருவழி" (மணி. 4 : 52). 2. கிழித்தல். "களிறு......ஆச்சாவைப் பிளந்து அந்நாரைப் பொளித்து" (தொல். பொருளியல், 37, உரை).

பொளி=1. உளியாலிட்ட துளை. 2. மண் வெட்டியின் வெட்டு. 3. பாய் பின்ன வகிர்ந்து வைக்கும் ஓலை. சிறு பொளிப்பாய் (நாஞ்சில் நாட்டு வழக்கு). 4. மண் வெட்டியாற் புல்லொடு சேர்த்து வெட்டிய வரப்பு மண்.

பொள்—பொளு. பொளுபொளுவெனல்=துளையிலிருந்து நீர்ப்பொருள் ஒழுகற் குறிப்பு.

புல்—புள்—புழு=துளைத்தரிக்கும் சிற்றுயிரி.

புழுத்தல்=1. புழுவைத்தல். புழுத்த கத்தரிக்காய். புழுப்புழுத்துச் செத்தான். (உ. வ.). 2. புழுவரித்தல்.

புழு—புகு. ஒ. நோ: தொழுதி—தொகுதி. தொழு—தொகு.

புகுதல்=1. துளைத்தல்போல் உட்செல்லுதல். வீட்டுக்காரர் வீட்டுக்குட் புகுந்தார்., பகைப்படை நாட்டிற்குட் புகுந்தது., வாள் உறைக்குட் புகுந்தது., (உ. வ.) "வானோர்க் குயர்ந்த வுலகம் புகும்." (குறள். 346). 2. உட்படுதல். "சிறை தளை சங்கிலி புகிலும்" (S.I.I. iii, 28). 3. அகப்படுதல். "சூறை புகுவன பாறையே" (தக்கயாகப். 64). 4. காலத்துட் செல்லுதல். "பிராய நூறு மனிதர் தாம் புகுவரேனும்" (திவ். திருமாலை, 3). 5. செல்லுதல். 6. தொடங்குதல். "கடனீராடுவான்......புகும்" (திவ். இயற். 3 : 69). 7. நிகழ்தல்.

புகு—புகா=(உட்புகும்) உணவு. "புகா அக் காலை" (தொல். கள. 16). புகா—புகவு=1. புகுகை. "கழுது புகவயர்" (ஐங். 314). 2. உணவு. "பழஞ் சோற்றுப் புகவருந்தி" (புறம். 395).

புகு—வ. புஜ் (bhuj). ஒ. நோ: பகு—bhaj. புகு—புகல்=1. புகுகை. "முனைபுகல் புகல்வின்" (பதிற்றுப். 84 : 17). 2. இருப்பிடம். "புனவர் கொள்ளியிற் புகல்வரு மஞ்ஞை" (ஐங். 295). 3. உயிருக்கு இருப்பிடமான உடம்பு. (பிங்.). 4. கூலம் இடுங் குதிர். (திவா.) 5. அடைக்கலம். "புகலது கூறுகின்றான்" (கம்பரா. விபீடண. 109). 6. துணை. (பிங்.). 7. பற்றுக்கோடு. "மையணற் காளை பொய் புகலாக" (நற். 179). 8. ஆம்புடை (உபாயம்). "புகலொன் றில்லா அடியேன்" (திவ். திருவாய். 6 : 10 : 10). 9. போக்கு. அடிக்கடி புகல்சொல்கிறான். (உ. வ.).

புகலி=1. புகலடைந்த—வன்—வள். 2. ஒரு பெரு வெள்ளக் காலத்திற் புகலிடமாயிருந்த சீகாழி.

புகு—புகார்=ஆறு கடலொடு கலக்குமிடம். "புகாஅர்ப் புகுந்த பெருங்கலம்" (புறம். 30). 2. காவிரி கடலொடு கலந்த இடத்துக் காவிரிப் பூம்பட்டினம். "பெரும்பெயர்ப் புகாரென் பதியே" (சிலப். 20 : 56).

புகு—புகுது. புகுதுதல்=1. உட்செல்லுதல். "பொய் யிலங்கெனைப் புகுதவிட்டு" (திருவாச. 5 : 92). 2. நிகழ்தல். "வேறொன்றும் புகுதா விட்ட". (பெரியபு. எறிபத்த. 38).

புகுது—புகுதி=1. மனைவாயில் (பிங்.). 2. நிகழ்ச்சி. "புகுதி யின்னதால்" (கந்தபு. சிங்கமு. 20). 3. நுண்மதி. "புகுதி கூர்ந்துள்ளார் வேதம்" (கம்பரா. முதற் போர். 222). 4. வழி. (அரு. நி.). 5. வருவாய். (அரு. நி.)

புகுது—புகுரு. புகுருதல்=புகுதல்.

புகுரு—புகுர்—பூர். பூர்தல்=புகுதல்.

பூர்—பூரான்=மண்ணிற்குள் விரைந்து புகும் நச்சுப் பூச்சி.

புகவொட்டு—புகட்டு. புகட்டுதல்=1. நீர்ப் பொருளைக் கலத்தில் ஊட்டுதல். குழந்தைக்குச் சங்கில் பால் புகட்டு. (உ. வ.) 2. அறிவுறுத்துதல். "செவிதிறந்து புகட்ட" (திருவிளை. விடையிலச். 4).

புகட்டு—போட்டு. போட்டுதல்=புகட்டுதல். போட்டுப் பால், குழந்தைக்கு மருந்து போட்டு (உ. வ.).

புகவிடு—புகடு. புகடுதல்=வீசியெறிதல். "மரனெடு வெற்பினம் புகடவுற்ற பொறுத்தன" (கம்பரா. நாகபாச. 146).

புகு—போ. போதல்=1. புகுதல். ஊசியின் காதில் இந்த நூல் போகுமா? (உ. வ.) 2. எண்ணில் அடங்குதல். பத்தில் ஐந்து இரண்டு தரம் போகும். (உ. வ.). 3. செல்லு தல். "மாமலர் கொய்ய......யானும் போவல்" (மணி. 3:83). 4. நெடிய தாதல், நீளுதல், நேராதல்.

" வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள ".

(தொல். உரி. 19)

5. விரிதல். போது=விரியும் பேரரும்பு. 6. பரத்தல். "எதிர் போம் பல்கதிர் ஞாயிற்றொளி" (கலித். 144:40). 7. கூடிய தாதல். மூச்சுவிடப் போகவில்லை. (உ. வ.) 8. நீங்குதல். குடிபோன வீடு. (உ. வ.. 9. ஒழிதல். "பல்போனாலும் சொல் போகுமா? (பழ.). 10. கழிதல். "போனதை நினைக் கிறவன் புத்தி கெட்டவன்." (பழ.) போன ஆண்டு மழை பெய்யவேயில்லை. (உ. வ.) 11. மறைதல். பொழுது போயிற்று. (உ. வ.). 12. முடிவாதல். "இன்பமாவதே போந்த நெறி யென்றிருந்தேன்" (தாயு. சின்மயானந்த. 5). 13. புணர்தல். அவளோடு போனான். (உ. வ.). 14. சாதல். "தந்தையார் போயினர் தாயரும் போயினர் தாமும் போவார்" (தேவா. 692:2).

போ—போக்கு=1. செல்கை. வழிப்போக்கு. 2. மனச் சாய்வு. அவன் போகிற போக்கு எனக்குப் பிடிக்கவில்லை. (உ. வ.) 3. வகை. அது ஒரு போக்கு. 4. களைகண். போக்கற்றவன். (உ. வ.). 5. புகல். "இலங்கை போக் கறவும்" (கம்பரா. மாயாசனக. 83). 6. நிலவாசி. ஆற்றுப் போக்கான இடம். 7. சாட்டு. ஒரு போக்குக் காட்டுவதற்குக் கடன்காரனை அவனிடம் அனுப்பினேன். (உ. வ.) 8. சாக்கு. போக்குச் சொல்லாதே குற்றத்தை ஒத்துக்கொள். (உ. வ.). 9. குற்றம். "போக்கறு பனுவல்" தொல். சிறப்புப் பாயிரம்). 10. சாவு. "போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே" (திருவாச. 1:77).

போகவிடு—போக்கு—போடு. போடுதல் = வலிதாய்க் கீழிடுதல்.

போகடுதல் = 1. (செ. முன்னுவி.) போகவிடுதல். "போகெனப் போகடாய்" (சீவக. 1365.). 2. விட்டுவிடுதல். "போகட்ட உடம்பையும்" (சீவக. 951, உரை). (செ. குன்றிய வி.) நீங்குதல். "பொல்லாதது போக்கடும்" (தேவா. 376:4).

போ—போகு. போகுதல்=1. போதல். 2. நீளுதல்.

போ—போது. போதுதல்=1. செல்லுதல். 2. விரிதல். 3. போதியதாதல். சொன்னால் மட்டும் போதுமா? எழுதிக் கொடுக்க வேண்டாமா? (உ. வ.).

புழு—புழல்=1. உட்டுளை. "பூழி பூத்த புழற்காளாம்பி" (சிறுபாண். 134). 2. சாய்கடை (சலதாரை). (பிங்.) 3. பண்ணியாரம். "தீம்புழல் வல்சி" (மதுரைக். 395). 4. மீன் வகை. (பிங்.).

புழல்—போல்=1. உள்ளீடல்லாதது. போல் கம்பி × கெட்டிக் கம்பி. 2. (உட்டுளையுள்ள) மூங்கில். (மலை.) 3. பதா. (W). 4. பொய்.

தெ. போலு.

புழல்—புகல்=புரையுள்ளது. (நெல்லை.)

புகல்வேலை—அணிகலங்களில் உட்டுளையமையச் செய்த வேலை.

புழல்—புடல். ஒ. நோ: குழல்—குடல்.

புடல்=உட்டுளையுள்ள புடலங்காய்.

புடல்—புடலை=புடலங்காய்.

புடலை—தெ. பொட்ல, க. படல.

புடலங்காய்—வ. பட்டோலிக்கா.

பட்டோலிக்கா என்னும் வடசொல் தமிழிற் புடல் என்று திரிந்துள்ளதாக, சென்னைப் ப. க. க. தமிழ் அகரமுதலி துணிச்சலுடன் குறிக்கின்றது. பகுத்தறிவுள்ளவர் உண்மை கண்டுகொள்க.

புள்—புளு—புடு—புடி. புடித்தல்=பொய் சொல்லுதல். பொய்புடிக்கிறான் (சேலம் வழக்கு). இது பொய்புளுகுகிறான் என்பது போன்ற மிகைபடக் கூறல்.

புடி—பிடி—பிசி. ஒ. நோ: ஒடி—ஒசி. பிசி=1. பொய். 2. உவமக் கூற்று வாயிலாக உண்மை நிகழ்ச்சியை அறிவித்தல். 3. விடுகதை. "பிசியும் நொடியும் பிறர்வாய்க் கேட்டு" (மணி. 22:62).

*"ஒப்பொடு புணர்ந்த உவமத் தானும்
தோன்றுவது கிளந்த துணிவி னானும்
என்றிரு வகைத்தே பிசிவகை நிலையே."* (தொல். செய். 174)

புடி—புசி. க. புசி.

புளு—புளுகு. புளுகுதல்=பொய் சொல்லுதல். புளுகு=பொய். புளுகுணி=வழக்கமாய்ப் பொய் சொல்பவன்.

புளுகு—வ. பல்கு (phalgu).

புல்—புற்று. ஒ. நோ- சுல் (சுலவு)—சுற்று. புற்று= 1. உட்டுளையுள்ள கறையான் மண்கூடு. "புற்றிடை வெகுளி நாகம்" (சீவக. 1285). கறையான் புற்றிற் பாம்பு குடி கொண்டது போல. (உ. வ.) 2. எறும்பு வளை. 3. புரை வைத்த புண். "புழுச்செறி......புற்றுறு நோய்" (கடம்பபு. இலீலா. 116).

தெ. புட்ட, ம., க. புத்து.

புற்று—புற்றம். "நெடுஞ்செம் புற்றம் ஈயல் பகர" (ஐங். 497).

புற்றளை=புற்றுவளை. "நாகம் கிடந்த........புற்றளை" (மணி. 20 : 99).

புற்றுத்தேன் = மதிலிடுக்கில் ஈக்களால் வைக்கப்பட்ட தேன்.

புற்றுவெடிப்பு=பாதத்தில் தோன்றும் பித்த வெடிப்பு.

புழு — புழை = 1. துளை. "தம்பத்தின்மேற் புழையே முளவாக்கி" (திருநூற். 23). 2. குழாய். (W). 3. வாயில். "திருந்தெயிற் குடபாற் சிறுபுழை போகி" (மணி. 6 : 22). 4. சிறுவாயில். "வாயிலொடு புழை யமைத்து" (பட்டினப். 287). 5. பலகணி. "சில்காற் றிசைக்கும் பல்புழை நல்லில்" (மதுரைக். 358). 6. ஏவறை. "கவையுங் கழுவும் புதையும் புழையும்" (சிலப். 15 : 212). 7. நரகம். "போகும் புழையுட் புகுந்து" (ஏலாதி, 11). 8. காட்டுவழி. "கவை முள்ளிற் புழை யமைப்பவும்" (புறம். 98). 9. ஒடுக்கவழி. "புழைதொறு மாட்டிய" (மலைபடு. 194). 10. ஆறு. சேரநாட்டு வழக்கு.

புழைத்தல்=துளையிடுதல். "அனங்கன் வாளி புழைத்ததம் புணர்மென் கொங்கை" (கம்பரா. கைகேசி. 85.).

புழைக்கை=1. தும்பிக்கை. 2. யானை (திவா)

புழைக்கை — பூழ்க்கை — பூட்கை = யானை. “பொன்றி வீழ்ந்த புரவிவெம் பூட்கைதேர்” (கம்பரா. முதற்போர். 58). “பூழ்க்கை முகன் மனுவை நனியென்னின்” (விநாயகபு. 14:9).

புழை—புடை=1. துளை. 2. எலிவளை. (W.). 3. குகை. 4. குகை போன்ற கிணற்றடிப் புழை.

புடை—புடம். ஒ. நோ: நடை—நடம். நடமாடுதல்= நடந்து திரிதல். நடமாட்டம்=நடந்து திரிகை, உலாவுகை. ஆள் நடமாட்டம்=ஆட்கள் உலாவி வழங்குகை.

புடம்=பொன்னைக் காய்ச்சித் தூய்மைப்படுத்தும் சிறு கலம். (ஞானா. 15 : 26). 2. தொன்னை (இலைக்கலம்). (யாழ். அக.).

புடம்—வ. புட (puta).

புழை—பூழ்=துளை. (இலக். அக.).

புழை—பூழை = 1. துளை. “புகையும் புகற்கரிய பூழை நுழைந்து” (நாலடி. 282.). 2. சிறுவாயில். “புழைத்தலை நுழைந்து” (தேவா. 845 : 1).

புள்—பூள்—பூறு. ஒ. நோ : கீள்—கீறு. பூறுதல் = துளைத்தல், கிழித்தல், கீறுதல்.

பூறு—பீறு. ஒ. நோ : நூறு—நீறு.

பீறுதல் = (செ. குன்றுவி.) 1. கிழித்தல். “அல்குற் பூந்துகிற் கலாபம் பீறி” (கம்பரா. ஊர்தே. 189). 2. கீறுதல். “பன்றிக்குமுன் முத்தைப் போட்டால் அவற்றைப் பீறிப் போடும்.” (விவிலியம், தமிழ் மொழிபெயர்ப்பு). 3. துளைத்தல். மூக்குப்பூறுதல். 4. பிளத்தல்.

பீறு—பீறல்=1. கிழித்தல். 2. கந்தை. “பீறற்சிலை யிதாருக் கென்று” (அரிச். பு. சூழ்வினை. 91). 3. கிழிசல். “சோறது கொண்டு பீறலடைத்தே” (தனிப்பாடல்).

பீறு—பீற்றல்=1. கிழிசல். 2. கந்தை.

மூக்குப் பூறி = மூன்றும் பிள்ளையாகப் பிறந்து மூக்குக் குத்தப் பெற்ற ஆண் பிள்ளை.

மூக்குப் பூறி—மூக்குப் பீறி.

பூறு=மலவாய்.        (தொடரும்)

———

## வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணியடிகள் வரலாற்றிற் சுவையான நிகழ்ச்சிகள்:

### 8: வேம்பத்தூர் பிச்சுவையரும், கோட்டூர்ச் சைவனும்

[தி. செ. முருகதாச அடிகள்]

தண்டபாணியடிகள், எப் பாடலையும் தப்பாமல் பாடுமியல் பினர். "புலவர்க்கு வெண்பாப் புலி" சாதாரணப் புலவர்கட் கமைந்த இயல்பு. சந்தம் பாடுகின்ற பெரும் புலவர்கட்கு இது மிகமிக எளியது என்பதை இவர் ஓரிடத்திற் கூறுகின் றனர். அதைப் பின்னர்க் காண்பாம்.

பொது நூல், சிறப்பு நூல், திருவெண்பா—விற்பனம், அருளாட்சி என்ற நூல்களைப் பாடி வெளியிட்டனர். அதைக் கண்ட வேம்பத்தூர் பிச்சுவையர் என்பவர் பெரும் புலவர். ஆசுகவி—அஃதாவது எண்ணிய கருத்தை அப்போதே கவியாகப் பாடுபவர். தண்டபாணி அடிகளை யறிவார்—அந்த நூலைக் கண்ட அவர் பாடுபவரா யிருப்பினும், இவர் பாடலில் பெரிதும் வியப்புற்றனர். உடனே ஒரு வெண்பா, கூறலாயினர். மேலே சொல்லிய நூற்களும் வெண்பாவால் ஆக்கப்பட்டவையேயாம். வண்ணச்சரபம் என்பது இவரது பட்டப்பெயர். அது புலவர்கள் வழங்கியது. தாமே வைத்துக்கொண்டதன்று—

"சந்தக் கவிக்கே சரபம்நீ என்றிருந்தேன்
இந்தக் கவிக்குநிகரியான் என்சொல்வேன்—சந்ததமும்
ஆர்முருகார் செஞ்சடிலத் தண்ணலடி யார்மகிழ
நேர்முருக தாசமன்ன னே"

என்று பாடினர்.

அடிகளைப் பொதுவாகக் கண்டு பாட்டமுதருந்துமிவர், தமது வீட்டமுதை அடிகட்கு உண்பிக்க வேண்டுமென்பது விருப்பம். ஒருநாள், புலவர்களுடன் சுவாமிகளிருந்த சமயம் வந்த ஐயர், என் வீட்டில் உண்ண வருக என்று அழைப்பார்? அரைக் கவியால் வினவினர்.

"பூமிக்குள் மிக்க புகழ்முருக தாசரெனும்
சாமிக்கு சைவே தனமெங்கே?

என்றனர். உடனே.

-'தேமிக்க
செந்தமிழின் சீரும் திருக்கைவேல் ஏந்திவரும்
கந்தனன்பும் உள்ளமனைக் கண்''

என மிடுக்குடன் பிற்பாதியை நிறைவு செய்து பதில் கூறினர். மகிழ்ந்தனர். பின்பு தம் இல்லத்திற்கழைத்து அமுதூட்டினர். புலவர்கள் பண்பு, பேச்செல்லாம் பாட்டாகவே வரும். சொல்லும் பொருளும் தேடி அவர்களை வந்தடையும்—

மற்றொரு நாள் கோட்டூர் சென்றபோது, அங்கு ஒரு சைவன் வீடு—உணவை நாடிச் சென்றனர். அவன் ஓரளவு அடியவரன்பு உடையவன். கூடத்தில் உபசாரமாக இலை யிடாமல், நடு வாசலில் இட்டான். அதை அவமதிப்பென எண்ணிய அடிகள், அங்கே ''இலை போட வேண்டாம். உண்ட பின் இலை யெடுக்கவும், அங்கு எச்சில் போக்கும் விதமும் அறிவேன்'' என்றனர். அது கேட்டு அஞ்சினனாயினும், பதில் கூறலானான். ''சுவாமீ! தங்கள் நிலை உயர்வாயிருக்கலாம். பொதுவாக, தங்கள் இனமாக வருபவர் நிலை பலவாறு யிருக்குமே என்றெண்ணினேன்'' என்றான். கூடத்தில் மரியாதையுடன் அமுது படைக்கலானான். கட்குடி, கஞ்சா முதலிய பழக்கத்தில், உண்டபோது வாந்தியுமெடுக்க நேரும். அப்படியானால், நீர் விட்டுச் சுத்தி செய்யலாமென எண்ணினன் போலும்.

சுவாமிகள், ''அடியவர் தவறு செய்யார்கள். ஒருசமயம் சிலர் தவறுடையராயுமிருப்பார்கள். எல்லாரையும் தெய்வ பாவனையில் வழிபடும் சைவர்களும் உலகில் உண்டென்றனர். வீர சைவப் பெருந்தகையான வசவண்ணர் தமது மடத்திற் கள்ளராக வந்தவர்களையும், தூய மெய்யன்பராக வணங்கினர். 'வெள்ளவேணிப் பெருந்தகைக்கு'—என்ற பாடல் விளக்கும் சான்று. அன்று அங்கே வாழையிலை கிடையாதுபோலும், தென்னையின் ஓலையினால் இலையுண்டாக்கி—சுண்டைக்காயும் பருப்புமிட்ட குழம்புடன், இலைக்கறியென்ற கீரை மசியலும் அமைய அமுது படைத்தான்—உண்டனர். உடன் ஒரு பாட்டோதி மீண்டனர்.

''கோட்டூரிற் சைவன்முகம் கோணாமற் கூடத்தில்
ஈட்டுதென்னை ஓலை யிலைகொணர்ந்து—போட்டெனக்குச்
சோறும் இலைக்கறியும் சுண்டைக்கா யும்பருப்புச்
சாறுமிட்டுப் பெற்றான் தவம்''

என்பதாம். இதனை,

"உருபொடி யுடன்போய் மற்றைநா ளினிற்கோட்
டூரிலோர் சைவன்வீட் டுற்றேன்
முகுளநா புரத்தான் மனைவியால் தனது
முன்றிலில் இலையிடத் துணிந்தான்"
"அப்படிச் செய்யேல்; அருந்திடத்(து) எச்சில்
அகற்றுமா றறிவன்யான் என்றேன்
எப்படி யோவின் இனத்தவர் உளரே
எனச்சொலிக் கூடமீ திட்டான்
தப்படி யவரும் தெய்வமே யெனக்கோள்
சைவரும் உளரெனப் பகர்ந்தேன்
இப்படித் துய்த்தேன்; அவன்தவம் பெற்றான்
என்றொர்வெண் பாட்டிசைத் தகன்றேன்'.'

என்பதால் அறியலாம்.

**தோசைக்கும் பாட்டு**

1. தேவகோட்டையில் ஒருநாள் அந்தணர் ஒருவர் வீட்டில் விரதநாள் போலும். தோசை செய்து அளித்தனர். அந்தத் தோசை, மென்மையா யிருந்தது. வியப்பெய்தினர். உடனே ஒரு வெண்பா—தோசையையே முன்னிலையாக்கி வினவினர்.

"தென்னர்புகழ் சீர்குலவு தேவகோட் டைப்பதியில்
சொன்னமையர் வீட்டிலுள்ள தோசையே—உன்னை அயன்
கண்டா லிலைவருத்த காரணமோ? நீயதைக்கண்(டு)
உண்டாயி·ஞயோ உரை"

என்பதாம்.

'அயன்கண்டு ஆலிலையை உண்டுபண்ணினான்' எனக் கொள்க. ஐயர் சொர்னம் ஐயர் என்பவர். ஆலிலை போல இலேசாக இருந்ததையும் அதன் மென்மையையும் பற்றி வியந்ததாகும்.

2. அடிகள் தந்தையாருக்கு நான்கு மனைவிகள். நான் காமவளிடந் தாம் பிறந்தவர். மூன்றாமவட்குப் பெண் மக வொன்று மட்டுமிருந்தது. அவளை கலப்பைபட்டி யென்னும் பதியில் மணம் செய்து கொடுத்திருந்தனர். ஒருநாள் திரு நெல்வேலியிலிருந்த சமயம், மைத்துனர் வீட்டுக்குப் போயினர். அன்று அவருக்கு விரத நாள். அப் பக்கத்தில் முதல் நாள் அரைத்த மாவு பழமையாகும் என்றெண்ணி—அப்போதரைத்த மாவையே தோசை செய்து உண்பது மரபு—அன்று அம்

முறையில் தோசை செய்ததை, அத்தானுடனிருந்து உண்ப தானுர் அடிகள். அதற்கு ஒரு பாட்டு,

"ஆட்டுரலின் மாவை அடுப்பில்வைத்த கல்மீது
போட்டு வெதுப்பிப் புசித்தோமே—காட்டுக்குள்
கத்தூரி வாசம் கமழும் கலப்பைபட்டி
அத்தான் விரதமத னுல்"

என்பதாம்.

ஆட்டுரல் - மாவரைக்கும் உரல். ஆட்டுக்கல் என்பது முண்டு. ஆட்டிய புது மாவை எனக் கொள்க - ஆட்டுக் கல்லின் மாவை, அடுப்புக் கல்லில் இட்டு வெதுப்பினர். தோசை செய்தனர், என்பதாம்.

நன்னரிக் குடிநீர் பற்றிய பாட்டு

அடிகள், செபம், தியானம், பாட்டெழுதுதல் இவற்றை விடாமற் செய்தபோது, உடலிற் சூடு அதிகமாயிற்று. நன்னரி யென்ற மூலிகையைக் காய்ச்சிய நீரை உண்ணும்படி சிலர் கூறினர். நன்னரி யென்ருல் நல்ல பெண் எனப் பொருள் கொண்டு, இப் பெயர், கலைமகள்—அலைமகள் (திருமின்), மலை மகள் (பார்வதி) இவ்விதமான ஒவ்வொருவருக்கு மட்டுமா—மூவர்கட்குமே தாமா என வினவுவார் போன்று ஒரு கவி ஓதினர்.

"நன்னரி யென்னும் நாமம் நாமகள் தனக்கோ,
பொன்னுடை மாயன் மார்பிற் பொருந்தினள் தனக்கோ, ஈசன்
தன்னுகப் பாதி யாட்கோ சாற்றும்மூ வருக்குந் தானே
அன்னும மூலி நோய்தீர்த் தருளுமென் றயில்கின் றேனே"

என்பதாம். பாடல்கள், எளிமை இனிமை.

நிவேதன உணவில் முருகன் கூறியவை

தினமும் ஒருவர் உண்ணுமளவு அன்னம்—மற்றும் குழம்பு முதலிய யாவையும் இட்டுப் பூசித்து, அப்படியே விரவி அனைவ ருக்கும் வழங்குவர். தம்மைக் காணவரும் நகர வாசிகளில் அன்று சென்னையிலிருந்த, வண்ணக் களஞ்சியம் நாகலிங்க முனிவர், அட்டாவதானம் பூவை. கலியாணசுந்தர முனிவர் முதலியோர் அடிகளிடம் ஆறெழுத்துபதேசம் பெற்ற மாண வர்கள். அரிசி சம்பந்தமான எதுவும் உண்ணுத கடுந்தவமுற் றிருந்ததால், இவை உண்ண உதவுமென்று உயர்ந்த பழ வகைகளை வாங்கிவந்து உதவுவர். அவற்றைத் தம் வேலாயுத

பூசையில் நிவேதித்துப் பகிர்ந்து பலருக்கும் அளிப்பர் அடிகள். அன்பராயுள்ள அவர்கள்,

"சுவாமீ! இவை அரிய பெரியவை. தங்கள் உணவுக்காகவே பெற்றுவந்தோம். தாங்களே அருந்த வேண்டு"மென்பார்கள். அதற்கு அடிகள் கூறுவது, "அதன் அருமையாதியன அறிவோம். நாக்கின் முகப்பில் இருவிரல் தாண்டி உட்புகுந்த பின் யார் உண்டாலும் ஒரே படிதான். பெறற்கரிய பேருன முத்தி வீட்டையே இறைவன் அளிப்பதாயினும், திருஞான சம்பந்தர் போல, அண்டினேர் பலரையும் சேர்ப்பித்துப் பின்னரே யான் செல்வேன். எல்லாரிடமும் இறைவன் உள்ளான் என்பதுண்மையல்லவா?" என்பார்கள். இக் கருத்தை நாளிலேச் சதகமென்ற நூலில் ஓரிடத்துக் கூறுகின்றனர்.

*"தானெரு மூர்த்தி நிவைக்குறித்துப் படைத்த வுண்டி*
*தனைத்தானே கொளல்நலமாச் சாற்று வார்கள்*
*ஆனவிதி முக்கியமன்(று) எவர்க்கும் நல்கி*
*அருந்தலே உத்தமமாம்"*

என்பதாம்.

அப்படிப்பட்ட தருணத்தில், குழம்பில் மிளகாய்ப் பொடி கூடியது. பெரிய வழிபாட்டின்போது, வேட்டியை விரித்து அன்னத்தைக் கொட்டிப் படைப்பார்கள். அப்படிச் சீலையில் (துணியில்) அன்னத்தையிடாதே என்பதை முருகன் கூறினாம். அல்லாமலும், பூசைமுடிவில் நீர் வார்க்க வேண்டும். இது முறை. அப்படி ஒருநாள் செய்யத் தவறினர் சுவாமிகள். "கைகழுவ நீர் விடவில்லையே, உடையிலா துடைத்துக்கொள்வது?" என்றாராம். பால் பூசையில் படைக்க விரும்பி ஒருநாள் கேட்டனராம். என்னே முருகப்பெருமான் விருப்பம்! கட்டளை.

அர்க்கிய-பாத்திய-ஆசமனம் என்ற மூவகையில் நீர் விடுவது பூசனை முறை. இதை முதலிலும் இறுதியிலும் செய்ய வேண்டும். ஒன்று பாதம் அலம்பவும், ஒன்று கை யலம்பவும், ஒன்று உட்கொள்ளவும் செய்தல். இதை முருகப்பெருமான் நினைவுபடுத்தினர் அடிகளிடம்.

*"பாச்சியெனக் கன்பிசையும் பாசாங்கோர் நாட்செய்தான்*
*சீச்சிசீ வே தனச்சோற்றைச் சீலையில்இ டேல்என்றும்,*
*காய்ச்சிபகு ழம்பில்மிள காயதிக மாமென்றும்,*

பாச்சி-பால். குழந்தைப் பெருமான் சொற்கள்.

புகைபடுத்தும் மணமின்று போந்ததா யிருந்ததென்றும்
வகைபடும்சி வேதனத்தை வாரியுண்ட கைகழுவும்
தகைகருதி நீர்பெய்தி அக்கையைத் தானையினில்
நிகையறியத் துடைப்பேனே என்றும் மிகச் செப்பினனுல்."

என்று கூறியதால், முருகப்பெருமான் படைத்த உண்டியை ஏற்ற அருமையை யறிகிறேம். அப்படியான பூசனையில் அடிகள் படைத்த உணவு—அன்பின் முதிர்வு. வெறும் சடங்கா யிராமல், உள்ளமொருமித்த பூசனையாயிருந்ததால் தான், அவ் வுணவின் தரத்தைக் கூறினன் பெருமான். கை கழுவ நீரும் கேட்டான். நம் போன்று உண்டான்? ஆயின் சோறு குறைந் திருந்ததா என்ன ? திருவருளை யாரறிவர்!

---

## தமிழரின் கடவுட் கொள்கை

பழைய யூதர்களும் மகமதியர்களுந் தவிர மற்றைச் சமயத் தவர்களெல்லாரும் பிறந்திறக்கும் உயிர்களையே அவ்வவர்பாற் காணப்பட்ட சில ஆண்மைச் செயல்களாற் கடவுளாகப் பிறழ உணர்ந்து அவை தம்மையே கடவுள் நிலையில் வைத்து வணங்கி வருகின்றுர்கள். ஆனல், இத் தமிழ்நாட்டின்கண் உள்ள சைவ சமயத்தவர்கள் மட்டுமே பண்டைக் காலந் தொட்டுப் பிறந்திறவாத் தன்மையனே முழுமுதற் கடவு ளாவன் எனத் தெளிய உணர்ந்து இன்றுகாறும் அக்கொள் கையிற் சிறிதும் வழுவாதவர்களாய் நிலைபெற்று வருகின்றனர்.

—மறைமலையடிகள்

(கடவுள் நிலைக்கு மாறுன கொள்கைகள் சைவமாகா. பக், கூ)

# கார் அஞ்சலி

[கவிஞர், சி. து. கன்னிசாமி கண்டறச்சேரி]

கண்பிசைந்து பிள்ளை கலங்கியழ நெஞ்சுருகி
நண்பிசையாத் தாயோநீ நன்முகிலே !—விண்ணின்
வழிமேல் விழிவைத்து வாடியநின் மக்கள்
அழிவதுநின் அன்புக்கென் னாம். 1

வேங்கைபோற் சீறும் விலையேற்றம் நெஞ்சதிர்ப்பச்
சாம்பயிர்கள் கண்டு தடுமாறித்—தேம்புமுயிர்
வாட்டம்தீ ராயேல் மழைமுகிலே! நின்றனருள்
நாட்டத்திற் காமோ நவில். 2

கைம்மா றுகவாத கார்முகிலென் றெல்லாரும்
இம்மா நிலத்தியம்பும் இன்சொல்லால்—செம்மைநலம்
உற்றநெடுங் கார்முகிலே! உன்னருள்தான் ஓய்ந்துவிடில்
எற்றாகும் வாழ்வின் இயல்பு. 3

செல்வர்எவ் வாறேனும் சிந்தைவளம் ஓயாமல்
நல்வாழ்வு வாழ்வர் நலமில்லாச்—செல்லல்
நடுத்தரத்தார் வாழார் நடுக்குறுவர் காரே!
அடுத்துதவி நல்காய் அருள். 4

கார்த்திகையும் ஓய்ந்திட்ட காலத்தும் இன்னமுமே
சீர்த்தியுள நின்கொடையைச் சிந்தித்துப்—பர்த்துருகி
வந்திடுக்கண் தீர்த்திடுவாய் வாழ்விப்பாய் என்றிவண்யாம்
நொந்திருக்க லாமோ நுவல். 5

இன்று றுவாய் இல்லையேல் நாளைவரு வாயென்றே
என்றுமுளம் தேம்பி இணைந்துருகி—மன்றுடையான்
கண்டமே போன்றிருண்ட கார்முகிலே! நொந்திட்டேம்
அண்டமிசை வாராய் அதிர்ந்து. 6

நடுமறந்தாய் நாட்டிலொரு பாகத்தார் வாழப்
படுதுயரால் மற்றவர்கள் மாழ்கிக்—கெடுவதுதான்
நற்றாய் முகில்நினக்கு நன்றாமோ செம்மைநலம்
அற்றாய்கொல் வாராய் அதிர்ந்து. 7

அதிர்க இருண்டெழுக அண்டமெலாம் போர்த்து
முதிர்க முடுகிமழை மோதிச்—சதிர்பரப்பி

ஆறுகுளம் வெள்ளங்கள் ஆக்கி வறுமையெலாம்
நீறுபடக் காரே நினே. 8

திங்கட் கணக்காகச் செம்புனலைக் காணுமல்
எங்கும் வறண்டதினி என்செய்கோம்—அம்புவியில்
ஆர்பிழைப்பா ரம்மா! அருமுகிலே! நின்றுருகிச்
சேர்வதற்குத் தாமதமேன் செப்பு. 9

வானறியும் நூற்புலவர் வார்த்தையெலாம் போய்ச்சிறப்பும்
நூனெறிசெய் பூசனையும் நொந்தழிய—ஊனமிகும்
தீமைகளே கண்டும் செயல்மறந்து கண்மூடும்
ஊமையோ நீமுகிலே ஓது. 10

நெஞ்சிற் கருவதங்கி நீள்பயிர்கள் வாடியும்நீ
நெஞ்சிற் கறுவுடனே நின்றிட்டால்—பஞ்சைமனத்
தேழையர்தம் பாட்டினையாம் எங்ஙன் எடுத்துரைப்பேம்
வாழிமுகி லேவிரைவில் வா. 11

---

## மழையமிழ்து

முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையான்
என்னத் திகழ்ந்தெம்மை ஆளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேல்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை ஆளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி அவள்நமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்.

—மணிவாசகர்.

மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்
நாமநீர் வேலி உலகிற் கவனளிபோல்
மேல்நின்று தான்சுரத்த லான்.

—சிலப்பதிகாரம்.

## புத்தாண்டு வாழ்த்து

[புலவர் கோ. இனியபெருமான், ஆரணி.]

(வெண்பா)

திங்கள் வெளியீட்டில் செந்தமிழ்ச் செல்வியிதழ்
பொங்கல் திருநாளில் புத்துணர்ச்சி—பொங்க
வருமாறு கண்டு வளர்மதியாய் இன்பம்
தருமாறு வாழ்க தழைத்து.

சங்கத் தமிழ்நூல்கள் சாற்றும் பழமையொடு
பொங்கும் புதுமையினைப் போற்றியே—எங்கும்
சிலம்பொலிக்கத் தேடிவரும் செந்தமிழ்ச் செல்வி
நலம்பொலிய வாழ்க நனி.

தாமரைச் செல்வர் தகவுடைய சுப்பையா
நாமிருக்கும் நாட்டின் நலம்பேணிப்—பாமரர்க்கும்
கல்விபெறச் செய்யும் கழகத்தின் நற்பணிகள்
செல்வியினால் வாழ்க சிறந்து.

## பொங்கல் வாழ்த்து

புலவர் இரா. திருஞானசம்பந்தன்

அண்ணல் காந்தி வண்ணமாய்த் தோன்றி
ஆண்டுகள் எண்பது ஆற்றிய தொண்டினால்
இன்றைய பாரதம் இனிதே போற்றும்
ஈரேழ் மொழியினர் இன்பம் எய்தினர்
உயர்ந்தோர் போற்றி உவகை எய்தினர்.
ஊக்க முடன்வளர் உயர்குடி யரசின்
எழுச்சி மிக்க வெள்ளிவிழாக் கன்னி
ஏக்கம் போக்கப் பாங்கியாய் நிற்க
ஐந்திரக் கலைஞரால் இந்தியா உயர
ஒப்பில் பொங்கல் மங்கை வந்தனள்
ஓங்கும் மழையால் ஓதும் வளத்தினை
ஔவை கண்ட அதியன் மனம்போல்
அஃகா தளிக்கப் புதுப்பால் பொங்குக!

———

தமிழ் மக்கள் நல்வாழ்வுக்குச்

# சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

## 54 ஆண்டுகளாகச் செய்துவரும் ஆக்கப் பணிகள்

கழகத்தின் பதிவு செய்யப்பட்ட அலுவலகம் திருநெல்வேலியிலும், தலைமைநிலையம் சென்னையிலும் கிளைநிலையங்கள் திருநெல்வேலி, மதுரை (50/51, மேல மாசி வீதி, கோவை (22/819, ரெங்கே கவுடர் வீதி), கும்பகோணம் (28, நகர் உயர்பள்ளிச் சாலை), திருச்சி (24, நந்திகோயில் தெரு, தெப்பக்குளம்) ஆகிய ஊர்களிலும் நடைபெறுகின்றன.

### நூல் வெளியீடு

பல துறைகளில் கழகம் **1540-க்கு மேற்பட்ட நூல்களை** வெளியிட்டிருக்கிறது.

### செந்தமிழ்ச் செல்வி

'**செந்தமிழ்ச் செல்வி**' என்னும் மாத இதழை 49 ஆண்டுகளாக வெளியிட்டு வருகின்றது. செல்வித் தொகுதிகள் 'கலைக் களஞ்சிய'மாகவும் 'வரலாற்றுக் களஞ்சிய'மாகவும் ஆராய்ச்சியாளர்களுக்குப் பயன்படுகின்றன.

### மறைமலையடிகள் நூல்நிலையமும் பிறவும்

எம்.ஏ., எம்.லிட்., டி.லிட்., பட்டப் படிப்புக்கும் பிற துறைகட்கும் பயன்படக்கூடிய முப்பதினாயிரத்துக்கு மேற்பட்ட தமிழ் ஆங்கில நூல்களைக் கொண்டு சென்னை இலிங்கிச் செட்டித் தெரு 105ஆம் எண் மாளிகையில் மறைமலையடிகள் நூல்நிலையமும், நெல்லையில் சிவஞான முனிவர் நூல்நிலையமும், பல்லாவரத்தில் மறைமலையடிகள் கலைமன்றமும் மிகவும் சிறப்பாக நடைபெறுகின்றன.

தமிழறிஞர்களும் அன்பர்களும் தங்களிடமோ தங்களுக்குத் தெரிந்தவர்களிடமோ இருக்கின்ற பழைய தமிழ் நூல்கள், இதழ்கள், ஓலைச் சுவடிகள் முதலியன அழிந்தொழிந்து போகவிடாமல் ஆராய்ச்சியாளர்கட்குப் பயன்படும்படி மறைமலையடிகள் நூல் நிலையத்துக்கு அனுப்பித் தமிழ்த் தொண்டினைப் போற்றுமாறு வேண்டுகரேம்.

## கழகத்தின் தொண்டு

கழகம் கூட்டுப் பங்கு நிறுவன (Public Limited Company) மாக இருப்பதோடு நீதிக் கட்சிக் கொள்கைகளையும், தமிழர் முன்னேற்றக் கொள்கைகளையும் நூல்கள் வழியும், செந்தமிழ்ச் செல்வி வழியும், மாநாடுகள் வழியும் போற்றி ஆக்கமான முறையில் வளர்த்து வருகின்றது.

மறைமலையடிகளார் திட்டமிட்ட தனித்தமிழ்க் கொள்கைகளையும் சீர்திருத்தக் கொள்கைகளையும் பரப்புவதோடு தமிழ், தமிழர், தமிழ்நாடு முன்னேற்றங்கட்குத் திங்கு ஏற்படுபபோதெல்லாம் மறுப்புகள் எழுதியும், அறிஞர்களின் கருத்துகளைத் திரட்டி அச்சிட்டுப்பரப்பியும், நூற்பதிப்புக் கழகம் செய்து வரும் பணி எக்காலமும் நிலைத்துப் பயன்தரும் சீரிய தொண்டாகும்.

## ஆட்சியாளர்க்குப் 'பத்மஸ்ரீ' பட்டம்

பேரறிஞர் அண்ணா அவர்கள் பரிந்துரையின்படி கழக ஆட்சியாளர்க்கு 1969ஆம் ஆண்டில் 'தாமரைச் செல்வர்' (பத்மஸ்ரீ) என்கிற பட்டம் வழங்கப்பெற்றது. கழகமில்லையேல் மறைமலையடிகளார் கொள்கைகள் பரவுவதற்கு வாய்ப்பிருக்காது. 1936 முதல் தொடர்பாகச் 'செந்தமிழ்ச் செல்வி' இந்திமொழி புகுத்தப்பெறுவதைச் சான்றுகளோடு கண்டித்து வருகின்றது. 'தமிழ்நாடு' என்னும் பெயர் சூட்டுவதற்கும், தமிழிசை வளர்ச்சிக்கும், 'ஸ்ரீ' என்ற சொல்லை அகற்றுவதற்கும், திருக்கோயில் வழிபாடு, இல்லச் சடங்குகள், தமிழில் நடைபெறுதற்கும், ஆட்சியும் நீதிமன்றமும் தமிழில் நடைபெறுவதற்கும், ஆவணங்கள் தமிழில் எழுதப்பெறுதற்கும், தெற்கெல்லை, வடவெல்லைகள் பிரிவினை ஏற்படுவதிலும் கழகம் பேரறிஞர் பலரின் துணை கொண்டு ஆற்றிய-ஆற்றிவரும் பணிகள் அளப்பில.

## வேண்டுகோள்

தமிழறிஞர்கள், அன்பர்கள், பள்ளி ஆசிரியர்கள், கல்லூரிப் பேராசிரியர்கள், நூலகத் தலைவர்கள் முதலியோர் கழக நிலையங்கட்குச் சென்று நூல்களை வாங்குமாறும் 'செந்தமிழ்ச் செல்வி' வரவழைப்பதற்கு ஆண்டுக் கட்டணம் ரூ. 10-00 செலுத்துமாறும் வேண்டுகிறோம். ஆயுள் கட்டணம் ரூ. 125-00. முதல் திங்கள் ரூ. 15-00-ம் பின்னர் 11 திங்கள் ரூ. 10-00 விழுக்காடும் அனுப்பிவைக்கலாம்.

1/140, பிரகாசம் சாலை,
சென்னை-1.
14-12-1974

வ. சுப்பையா
கழக ஆட்சியாளர்.

## முன்னாள் சட்டமன்றத் தலைவர்
## சிவசண்முகம் பிள்ளை மறைவு

முன்னாள் தமிழகச் சட்டமன்றத் தலைவர் திரு. ஜே. சிவசண்முகம் பிள்ளையவர்கள், 2-1-75 இல் தமது 74 ஆம் அகவையில் சென்னையில் காலமானார் என்ற செய்தியறிந்து வருந்துகிறோம்.

திரு பிள்ளையவர்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பில் தோன்றியவர். எம்.ஏ., வரையில் படித்துப் பட்டம் பெற்றவர். பொது வாழ்க்கையில் ஈடுபட்டு, நாட்டு விடுதலைக்கும் தாழ்த்தப்பட்டோர் உயர்வுக்கும் அரும்பாடு பட்டார். 1937 ஆம் ஆண்டில் சென்னை மாநகரத் தந்தை (மேயர்) யாகவும், 1946 இல் தமிழகச் சட்டமன்றத் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றார். பல ஆண்டுகள் அப் பதவியில் அமர்ந்து நடுநிலை தவறாமல் பணியாற்றினார். 1962 முதல் 1968 வரை தில்லி நாடாளுமன்றத்தில் மாநிலங்கள் அவையில் உறுப்பினராகப் பணியாற்றினார். பின்னர் இந்தியப் பணித்துறைத் தேர்வாளர் குழுவில் ஆறு ஆண்டுக் காலம் உறுப்பினராகப் பணியாற்றினார். கழக ஆட்சியாளர் விரும்பிய வண்ணம் கழகத்துக்கு ஒல்லும் வகையில் உதவிபுரிந்து வந்தனர். சிறந்த பண்பாளரும் நாட்டுப் பற்றாளருமான இவர்தம் இழப்பு அரசியல் உலகிற்கு ஒரு பேரிழப்பாகும். மறைந்த திரு பிள்ளையவர்களின் குடும்பத்தார்க்கும் நண்பர்கட்கும் எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.



## பேராசிரியர் அ. சீனிவாசராகவன் எம். ஏ. மறைவு



தமிழ் அறிஞரும், சாகித்திய அகாடமி பரிசு பெற்றவரும், தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரி முன்னாள் முதல்வருமான பேராசிரியர் அ. சீனிவாசராகவன் அவர்கள் 5-1-75 இல் தூத்துக்குடியில் தமது 70 ஆவது அகவையில் காலமானார் என்ற செய்தி கேட்டு வருந்துகிறோம்.

பேராசிரியர் அவர்கள் தமிழ் அறிஞராக இருந்ததோடு, ஆங்கிலத்தில் எம்.ஏ., பட்டம் பெற்றவர். சில காலம் நெல்லை ம. தி. தா. இந்துக் கல்லூரியில் பணியாற்றினார். 1951 முதல் 1967 வரை தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரியின் முதல்வராகவும், பின்னர் 2 ஆண்டுகள் சிறப்புப் பேராசிரியராகவும்

பணியாற்றினர். சென்னை விவேகானந்தர் கல்லூரியிலும் இவர் சிறிது காலம் விரிவுரையாளராகப் பணியாற்றியுள்ளார்.

தமிழகச் சட்டமன்ற மேலவை உறுப்பினராகவும், மதுரைப் பல்கலைக்கழக ஆட்சிமன்ற உறுப்பினராகவும் இருந்து அரசியல் பணியும் கல்விப் பணியும் ஆற்றியுள்ளார். தமிழில் பல கவிதைகள், கட்டுரைகள், நாடகங்கள் எழுதியுள்ளார். இவர் எழுதிய "வெள்ளைப் பறவை" என்னும் கவிதைத் தொகுப்புக்குச் சாகித்ய அகாதமி விருது அளித்துள்ளது. 'சிந்தனை' என்ற தமிழ் இதழின் ஆசிரியராகச் சில காலம் இருந்தார். சுப்பராமாயணத்தையும் தாகூரின் 'கீதாஞ்சலி'யையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். திருநெல்வேலியில் கழகம் நடாத்திய இலக்கிய மாநாடுகள் ஒன்றிரண்டிற் கலந்து பாராட்டுரை வழங்கியுள்ளனர்.

இங்ஙனம் தமிழ் ஆங்கிலம் இரண்டிலும் வல்லுநரான இப் பேராசிரியரின் மறைவு தமிழகத்துக்கு ஒரு பேரிழப்பாகும். மறைந்த பேராசிரியரின் குடும்பத்தார்க்கு எமது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

---

# செய்திகளும் குறிப்புகளும்

## நெல்லைக், குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளி ஆண்டு விழா

சை. சி. நூற்பதிப்புக் கழகத்தின் சார்பில் நெல்லையில் நடைபெற்று வரும் குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளியின் ஆண்டு விழா 1-12-74 இல் சிறப்புற நடைபெற்றது. நெல்லை சார்புத் துணை நடுவர் திரு தே. பே. சு. பழனிச்சாமி, பி.ஏ., பி.எல்., அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினார்கள். தாமரைத் திரு வ. சுப்பையா அவர்கள் பள்ளியின் பணிகள் பற்றியும் கழக அறநிலையங்கள் ஆற்றும் பணிகள் பற்றியும் வரவேற்புரையில் விளக்கினர்.

விழாவினை யொட்டிப் பள்ளிச் சிறுவர்களால் பல்வகை ஆடல், பாடல், நாடகங்கள் நடைபெற்றன. திருவாட்டி தே. இராசம், B.Sc., B.T., அவர்கள் மாணவ மாணவிகட்குப் பரிசுகள் வழங்கிப் பாராட்டினார்கள்.

இப் பள்ளி, பண்டித நேரு அவர்களின் நினைவாக 1957 நவம்பர் 11 ஆம் நாள் துவங்கப் பெற்றது. முதன் முதல் மூன்று பிள்ளைகளைக் கொண்டு துவங்கப் பெற்ற இப் பள்ளி இன்று இருநூற்றைம்பது குழந்தைகளைக் கொண்ட ஒரு சிறந்த பள்ளியாகத் திகழ்கின்றது. இப் பள்ளியில் குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்கும், உடல் வளர்ச்சிக்கும் ஏற்ற கல்விப் பயிற்சி அளிக்கப்பட்டு வருகின்றது. நல்ல தமிழ்க் கல்வியோடு, ஆங்கில - இந்திய ஆசிரியர்களைக் கொண்டு ஆங்கிலக் கல்வியும் அளிக்கப் பெறுகின்றது. ஆசிரியர்கள் குழந்தைகட்குக்

கல்வி கற்பிப்பதில் நன்கு தேர்ச்சி பெற்றவர்களைப்போல் இப் பள்ளியில் சேர்ந்து பயிலும் குழந்தைகள் நன்கு பேசவும் எழுதவும் ஆற்றல் பெற்று வளர்கின்றனர். அத்துடன் குழந்தைகளைப் பாது காப்பதற்குச் செவிலியரும் உள்ளனர்.

விழாவிற்குத் தலைமை தாங்கிய சார்பு நடுவர் அவர்கள் சிறந்த தமிழ்ப் பற்றுளர். எனவே, அவர்கள் உரையாற்றியபோது தாமரைத் திரு வ. சுப்பையா அவர்கள் ஆற்றிவரும் அரிய தமிழ்த் தொண்டு களையும், அறப் பணிகளையும் பாராட்டினர். குமரகுருபரர் முருகனருள் பெற்றுப் பேசவும் பாடவும் வல்லவரானதுபோல் இப் பள்ளியின் உதவியால் குழந்தைகள் அறிவு வளர்ச்சியும், உடல் வளர்ச்சியும் பெற்றுத் திகழ்வார்களாக.

## இந்தித் திணிப்பில் தில்லி முனைப்பு

இந்தியாவின் நடுவண் அரசின் பாதுகாப்பு அமைச்சகம் இப்போது இந்தித் திணிப்பில் பெருமுனைப்புக் காட்டத் துவங்கியுள்ளது.

பாதுகாப்பு அமைச்சகத்தைச் சார்ந்துள்ள "கேந்திரிய இந்தி சமிதி" என்ற பெயரில் இந்தியைப் புகுத்தும் துணைக்குழு வொன்று இப்போது செயல்படத் துவங்கியுள்ளது. இக் குழுவில் உள்ளோர் யாவர் என்பதைப் பார்த்தால் அதிர்ச்சி தருவதாக இருக்கிறது. குழுவின் தலைவராகப் பாதுகாப்பு அமைச்சர் சுவரண் சிங்கும், துணைத் தலைவர்களாகப் பாதுகாப்பு, உற்பத்தித் துறை அமைச்சர் ஆர். என். மிஸ்ரா (அண்மையில் காலமானர்)வும் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளனர்.

நடுவண் அரசுப் பணித்துறைகளில் எந்தெந்த முறையில் இந்தியைப் புகுத்தலாம் என்பது குறித்து இக் குழு ஆராய்ச்சி செய்யுமாம். இந்திய அரசின் பாதுகாப்புத்துறை அமைச்சவையே இந்தியைப் பாதுகாக்க முனைந்திருப்பதிலிருந்து இந்திய மக்களின் பாதுகாப்பைவிட இந்தி மொழியின் பாதுகாப்பில் அரசு காட்டும் அக்கறை எப்படிப்பட்டது என்பது தெளிவாகப் புரிகின்றதன்றோ!

## உலகத் தெலுங்கு மொழி மாநாடு

நான்கு உலகத் தமிழ் மாநாடுகள் நடைபெற்றதன் விளைவாக, சமஸ்கிருதம், இந்தி, தெலுங்கு ஆகிய மொழிகளுக்கும் அப்படியொரு மாநாடு நடத்திப் பார்த்திட வேண்டும் என்ற எண்ணமும் எழுச்சியும் அம்மொழி பேசுவோரிடம் தோன்றியுள்ளது என்பது அண்மைக் காலமாக இதழ்களில் வரும் செய்திகளால் தெரியவருகின்றது.

தெலுங்கு மொழியின் நாகரிகத்தையும் பண்பாட்டையும் விளக்கும் வகையில் உலகத் தெலுங்கு மாநாடு ஒன்று வருகிற 12-4-1975 இல் ஐதராபாத்தில் நடத்துவதெனவும், அதனையொட்டிப் பொருட்காட்சி யொன்றினை நடத்தவும் மாநாட்டுக் குழுவினர் முடிவு செய்துள்ளனர். தெலுங்கு தமிழினின்று பிரிந்த மொழி என்பதைத் தெலுங்கர் உணர்தல் வேண்டும் எனத் தெரிவித்துக்கொள்கிறோம். தெலுங்கர்க்குப் பழங் கால மூல இலக்கியங்கள் தமிழிலேதான் உள்ளன என்றும், பழந்

காலத் தெலுங்கு நூல்களும் சுவடிகளும் காட்சியில் வைக்கப்படும் என்றும் அதனால் பழங்கால நூல்களை வைத்திருப்போர் அவற்றைப் பிப்ரவரி [illegible] வைக்க வேண்டுமெனவும் ஆந்திர நீர்ப் பாசன அமைச்சரும் விழாக் குழுவின் தலைவருமான திரு வி. குட்டினா மூர்த்தி வேண்டுகோள் விடுத்துள்ளார்.

## பூம்புகார் கப்பல் போக்குவரத்துக் கழகத் தொடக்க விழா

தமிழக அரசின் சார்பில் பூம்புகார் கப்பல் போக்குவரத்துக் கழகம் 19-12-74 இல் துவக்கப்பட்டது. இக் கழகத்திற்காகத் தமிழ்-பெரியார் ஈ. வே. ரா, 'தமிழ் அண்ணா' என்னும் பெயரில் இரு கப்பல்கள் வாங்கப் பெற்றுள்ளன. இவற்றுள் தமிழ்-பெரியார் ஈ. வே. ரா. என்னுங் கப்பலைத் தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள், கப்பலில் தமிழ்க் கொடியை ஏற்றி வைத்து அதன் பயணத்தைச் சென்னைத் துறைமுகத்தில் தொடங்கி வைத்தார். விழாவிற்குச் சுற்றுலாத் துறை அமைச்சரும் கல்வி அமைச்சருமான மாண்புமிகு நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் தலைமை தாங்கினர். விழாவில் தமிழ் அமைச்சர்களும், சட்டமன்ற உறுப்பினர்களும், மேலவை உறுப்பினர்களும், நாடாளுமன்ற உறுப்பினர்களும் ஈ. வே. ரா. மணியம்மை அவர்களும் கலந்துகொண்டனர்.

"நீராருங் கடலுடுத்த" என்று தொடங்கும் தமிழ்த்தாய் வாழ்த்துடன் விழாத் தொடங்கிற்று. இந் நிகழ்ச்சியால் கப்பலோட்டி வரலாற்றுப் புகழ் படைத்த தமிழகம் மீண்டும் கப்பலோட்டிப் புதிய வரலாறு படைக்கிறது. முன்னர் பிரிட்டிசு ஆட்சியில் கப்பலோட்டிய விடுதலை வீரர் வ. உ. சிதம்பரனார் இப் பணிக்கு முன்னோடியாகத் திகழ்ந்தார். இன்று தமிழகம் வ. உ. சி. அவர்களின் பணியினை முற்றுவிக்கும் வகையில் தொடங்கியிருக்கும் இப் பூம்புகார் கப்பல் கழகம் வாழ்க! வளர்க என வாழ்த்துவதோடு, இம் முயற்சியில் ஈடுபட்ட தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களுக்கும் நம் பாராட்டுகளையும் வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## தமிழறிஞர் சாமி சிதம்பரனார் பிறந்தநாள் விழா

தமிழ் மன்றம் மூன்றுவது ஆண்டு சென்னை வண்ணைபம்பதியில் 14-12-'74 இல் நடைபெற்றபோது, தமிழறிஞர் சாமி சிதம்பரனார் அவர்களின் பிறந்தநாள் விழா சர். தியாகராயர் கல்லூரித் துணை முதல்வர் பேராசிரியர் ம. இராசமாணிக்கம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. புலவர் மு. அன்பரசன் வரவேற்புரை நிகழ்த்தினர். கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் சாமி சிதம்பரனாரின் தமிழ்த் தொண்டினைப் பற்றி அரியதொரு சிறப்புரை ஆற்றினர். திரு வே. தில்லைநாயகம், பேராசிரியர் தொண்டல் சு. மகாதேவன், திரு சிதம்பர ரகுநாதன்; திரு கி. வீரமணி ஆகியோரும் சிறப்புரை ஆற்றினர். புலவர் மா. சண்முகம் நன்றி கூறினர்.

## இலங்கையில் தமிழர் கிளர்ச்சி

இலங்கை நாடாளுமன்றத்தில் யாழ்ப்பாணத் தமிழர்களுக்குப் போதிய அளவு இடமளிக்காத வகையில் சட்டத்தைத் திருத்தம்

செய்ய ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி திட்டமிட்டிருப்பதைத் தமிழர் தந்தை தரு செல்வநாயகம் வன்மையாகக் கண்டிக்துவளார். இலங்கை அரசின் இச் செயலை எதிர்த்துத் தமிழர்கள் அனைவரும் கிளர்ந்தெழுந் துள்ளனர். ஒரு கோடியே நாற்பது நூறாயிரம் தமிழர்கள் இப் போராட்டத்தில் ஈடுபட ஆயத்தமாக இருக்கின்றனர்.

## புகை பிடிப்பதும் வெற்றிலை போடுவதும வாய்ப் புற்றுக்குக் காரணம்

இந்தியாவில் வெற்றிலை பாக்கு போடுவதுதான் வாயில் புற்று நோய் ஏற்படுதற்குக் காரணம் என்றும், புகை பிடிப்பது நுரை யீரலிலும் வாயிலும் புற்று நோய் வருவதற்குக் காரணம் என்றும் பம்பாய் ஆராய்ச்சி நிலையத்தில் டாக்டர் ஆர். எஸ். ராவ், டாக்டர் பி. என். எம். ராவ், என் ஜி. சம்சால் கண்டுபிடித்துள்ளனர். மணமான பெண்களை விட மணமாகாத பெண்களுக்கே பர்பில் புற்று நோய் வருவதாகவும் இதற்குச் சுரப்பிகள் நன்கு இயங்காததே காரணம் என்றும் அவர்கள் கருதுகின்றனர்.

—சுதேசமித்திரன், 30-12-74

## மீனம்பாக்கம் வானூர்தி நிலையத்தில் தமிழில் அறிவிப்பு

எங்கும் எதிலும் தமிழ் என்பதைச் செயல்படுத்திவரும் தமிழக அரசின் கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் அண்மையில் அறிவித்தபடி 7-1-75 முதல் மீனம்பாக்கம் வானூர்தி நிலையத்தில் விண்ணூர்திகளின் வருகை—புறப்பாடு பற்றிய நேரங்கள் தமிழிலேயே அறிவிக்கப் பெறுகின்றது.

## மதுரைமா நகரில்!

தொழில், வணிகம் முதலிய நிலையங்களில் காணப்பெறும் பெயர்ப் பலகைகள் அனைத்தும் தமிழிலேயே எழுதப்படல் வேண்டும் என்ப தற்காக மதுரைமா நகரின் முன்னாள் மேயர் திரு முத்து அவர்கள் ஒரு கிளர்ச்சியைத் தொடங்கியுள்ளார். இது நமக்குப் புதிதன்று. ஏறக் குறைய முப்பது ஆண்டுகட்கு முன்னரே நமது கழகம் இத்தகைய தொரு முயற்சியில் ஈடுபட்டதும், தமிழ்ப் பாதுகாப்புக்கெனவே தனியாக ஒரு கழகம் தோற்றுவித்து இன்றுகாறும் பணியாற்றி வருவதும் தமிழன்பர்கள் அறிந்ததே.

## உருசியாவில் இந்திய ஆராய்ச்சி

8-1 75இல் சென்னைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற சிறப்புக் கூட்டமொன்றில் மாஸ்கோவிலிருந்து வந்துள்ள பேராசிரியர் ஜி. எம். போங்கர் லெனின் எனபவர் "உருசியாவில் இந்திய ஆராய்ச்சி" என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினர். அவர் தம் உரையில் பண்டைய ஐரோப்பாவில் தென்னக வீரர்கள் பணியில் அமர்த்தப்பட்டி ருந்தனர் எனவும், சிந்துவெளி எழுத்துகள் திராவிடத்தை சேர்ந்தவை எனவும், உருசியாவில் கிழக்கு நாடுகள் பற்றிய ஆராய்ச்சி வளர்ந்து வருகிறது எனவும், 'இந்திய தத்துவம்' என்னும் நூல் உருவாக்கப்பட்டு வருவதாகவும், அதற்கு முப்பதாயிரம் விண்ணப்பங்கள் வந்துள்ளன வென்றும், அந்நாட்டில் பொது மக்கள் நிறையப் புத்தகங்களை வாங்கு கிறார்கள் என்றும் குறிப்பிட்டார்.

## கை(ரேகை)யைக் கொண்டு நோய்களைக் கண்டுபிடிக்கலாம்

கேரள அரசு மருத்துவக் கல்லூரியில் கைரேகை சோதிடர் ஒருவர் நோய்களைக் கண்டுபிடித்துச் சொல்கிறார். அதனை மருத்துவர்கள் உண்மையாகவே நம்பி மேலும் அச் சோதிடர்க்குச் சில திங்கள் ஆராய்ந்து சொல்வதற்கு இடமும் வசதியும் கொடுத்திருக்கின்றனர்.

'இந்து' 10-1-75

---

## மதிப்புரை

### மாந்தர் சிறப்பு

[ஆசிரியர்: டாக்டர் எஸ். வி. சுப்பிரமணியன். விற்பனை உரிமை: ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், கோர்ட்டு ரோடு, நாகர்கோயில். விலை ரு 3-50. பக்கங்கள்: 121]

தமிழ் இலக்கியம் வளர—முத்தமிழின் மாண்பு உலகெலாம் பரவ இலக்கிய ஆராய்ச்சி, அதிலும் குறிப்பாக கட்டுரைப் பிரிவு மேன்மேலும் வளருதல் மிகமிக இன்றியமையாததாகும். 'மாந்தர் சிறப்பு' என்னும் இக் கட்டுரை நூல் இதற்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டாகத் திகழ்கின்றது. இதன்கண் பதினொரு அரிய கட்டுரைகள் அடங்கியுள்ளன. அவற்றுள் முதல் ஐந்து கட்டுரைகள் சிந்தனைக்கு வேலை தரும் சீரிய கட்டுரைகள்.

பகுத்தறிவுடைய மனிதனின் பண்பாக அமைந்துள்ள 'நாண்' என்பதைப் பரிமேலழகர் உரை கொண்டு விளக்குந் திறனும், மனிதன் எங்ஙனம் வாழ வேண்டும்-வளர வேண்டும் என்பதற்கு இந் நூலாசிரியர் தரும் எடுத்துக் காட்டுகளும் வியந்து பாராட்டுதற்குரியன. அவற்றை விரிக்கின் பெருகுமாதலால் அன்பர்கள் இந் நூலின் 18, 48, 59 ஆம் பக்கங்களை முறையே படித்தறிதல் சாலப் பயனும் சுவையும் தருவனவாகும்.

கம்பன் பாடல்களை ஆசிரியர் எடுத்து விளக்கும் திறன் சுவை நிரம்பி வழிகின்றது. நாடோடி இலக்கியம், பாஞ்சாலி சபதத்தில் அரசியல் அமைவு, கவிமணியின் நகைச்சுவை, வஞ்சிநாட்டில் படர்ந்த தமிழ்க் கொடி, மாடலன் இன்னபிற கட்டுரைகள் நூலுக்கு அணி செய்கின்றன.

பள்ளியில் பயின்ற நூல்கள் தொடங்கிச் சங்க இலக்கியம் ஈறாக தக்க மேற்கோள்கள் காட்டி ஆசிரியர் எழுதியுள்ள இக் கட்டுரைத் தொகுப்பு கற்றார் அனைவரும் பன்முறை படித்து இன்புறத் தக்கவை.

—க. சி. கமலையா

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்திற்காக
சென்னை-600001, 2-140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில்
திரு வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: வ. சுப்பையா.

## கழகப் புதிய வெளியீடுகள்

**தாளின் கதை (Story of Paper)**

—என். கே. வேலன் பி.ஏ.

தாள் எப்படி — எப்போது கண்டு பிடிக்கப்பட்டது. அதனைச் செய்வது எப்படி — தாளின் வகை — தாள் பஞ்சத்தைப் போக்கு வது எப்படி—இன்னபிற செய்திகளைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் அரிய நூல். ரூ. 4 - 25

**இளைஞர்க்கான அரிச்சந்திரன் கதை**

—சு. அ. இராமசாமிப் புலவர்

வாய்மையைக் கடைப்பிடிக்க வழிகாட்டும் அரிச்சந்திரன் கதையை இளைஞர்கள் படித்தின்புறும் வகையில் இனிய எளிய தமிழில் வெளிவந்துள்ள சுருக்க நூல் ரூ. 1 - 75

**இளைஞர்க்கான பாரதக் கதை**

—சு. அ. இராமசாமிப் புலவர்

இந்திய நாட்டின் இரு பெருங்காப்பியங்களுள் ஒன்றான பாரதம் கதைச்சுவை நிரம்பியது. இளைஞர்கள் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கப் பெறுகிறது இந்நூல். ரூ. 4 - 00

**கிறித்து மொழிக் கதைகள் அல்லது கிறித்து மொழி உவமைகள்**

புலவர். இரா இளங்குமரன்,

கிறித்துபிரான் உலகிற்கு வழங்கியுள்ள அறிவுரைகள் பல. அவை மக்களுக்கு எளிதில் புரியவேண்டும் என்பதற்காக, தம் அறிவுரைகளைக் கதைகள் வாயிலாகவும், உவமைகள் வாயிலாகவும் வழங்கினர். சிறுவர்கள் அவற்றைப் படித்துப் பயன்பெறும் வகையில் வெளிவந்துள்ள சுருக்க நூல் இதுவே. ரூ 2 – 00

**பெரியபுராணக் கதைகள்**

—என். கே. வேலன், பி.ஏ.

இதன்கண் இளைஞர்கள் படித்து இன்புற வழிகாட்டும் வகையில் நாயன்மார் சிலர் கதைகளை மட்டும் அமைந்திருக்கும் ஒரு சுருக்க நூலாகும். இது பள்ளி நூலகங்கள்தோறும் இருக்க வேண்டிய நூல் ரூ. 2 - 75

## பிற பதிப்பாளரின் புதிய வெளியீடுகள்

அகிலன் ஆய்வடங்கல் — சு. வெங்கடராமன் ரூ. 10 00

குறள் கூறும் இறைமாட்சி

—டாக்டர் தி. முருகரத்தினம் ரூ. 6 00

கவசக் கொத்து

—தொகுப்பாசிரியர்: சி. என். நாச்சியப்பன் ரூ 1 50

தமிழ்ப் பாவியல் — ரா சீனிவாசன் ரூ. 10 00

இலக்கிய ஒப்பாய்வு

—வி. எம். ஞானப்பிரகாசம். PH.D.

—க. ப. அறவாணன், M.A., M.Litt. ரூ. 10 00

ட... எண் : M. 4899



அப்பர் அச்சகம், சென்னை-600 001.